நூல்களிலும் யோகநூல்களிலும் மற்றும் சில விசிஷ்டாத்துவித நூல்களிலும் பல சைவநூல்களிலும் அத்துவிதிகளை வேதாந்திகளென்றே பெயரிட்டழைக்கின்றார்கள். மாபாரதம் முதலிய வார்ஷ நூல்களிலும் மகிம்னம் முதலிய தெய்வநூல்களிலும் ரகுவம்சம் முதலிய மானிட நூல்களிலும் இம்மதஸ்தரை வைதிகரென்றுசொல்லுகின்றார்கள். இங்ஙனமாக இம்மதஸ்தரை அத்துவிதிகளென்றாவது, வேதாந்திகளென்றாவது, வைதிகரென்றாவது சொல்லாமல் அவற்றைவிட்டு வீணில் தம்மவர் மட்டும் வைத்த பேரைக்கொண்டு கேவலாத்துவிதிகளெனச் சொல்வது மரபன்று; நன்றுமன்று.

இதன்பேரில் அத்துவிதிகளை மாயாவாதிகள் என்று கூறுகின்றார். இதன் காரணம் நமக்குப் புலப்படவில்லை. மாயையை முதற்காரணமாகச் சொல்லுங்காரணத்தால் சித்தாந்த சைவரான இந்தப் பரசமய கோளரியே மாயாவாதியாக, பிரமத்தை முதற்காரணமாகச் சொல்லும் பிரமவாதிகளான அத்துவிதிகளை மாயாவாதிகளெனக் கூறுவது நியாயமன்றே. அவரவரது காரணப்பெயர் அவரவர்க்கிருப்பது நியாயமாமேயன்றி மற்றவர்க்கிருப்பது நியாயமன்றே. மாயாவாத விஷயமாய் இப்பத்திரிகையில் பலவிடங்களிற் பேசியிருப்பதையுய்த்துணர்ந்து, அவற்றிற்கெல்லாம் பதில்விடுத்து, பின்னர்ப்பிறரை மாயாவாதிகளென வரையக்கடவராக. அத்துவித விஷயமாய் எழுதியவைகளுக்கு இப்பிரம வித்தியாபத்திராசிரியரே சமாதானம் எழுதியிருக்கின்றமையால் அதன் பொருளை ஆண்டுத் தெரிந்துகொண்டு சமாதானப் படுவாராக.

பரசமய கோளரி, "சேதனுசேதனப் பிரபஞ்சங்கள் தன் ஜாதி "அந்நியஜாதியாய் நிலைபெறவும், தன்னின் வேறு யொரு பொருளு "மின்றி யென்று அவர் (அத்துவிதிகள்) அங்ஙன மின்மைப்பொருள் "கொள்வ தெற்றிற்கோ" என்கிறார். இதற்குச் சமாதானந் தெரிந்துகொள்ள மாட்டாதவர் பரசமய கோளரியென்று பேர்பெற்றிருப்பது சாதாரணமனிதன் சக்கரவர்த்தி யென்று சொல்லிக்கொள்வது போலாம்.

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய

## வேதாந்த சூடாமணி.

திருந்திய வேதாந்த நூலியம் புறுவதிருக்கு<br>
திரிசிய மென்றிரு பொருள் அங்கவற்றின் முதல் திருக்கின்<br>
வரைந்திடுவ சுவகதந் தன்சாதி விசாதிகளாம்<br>
மற்றவை மூன்றினுக்கும் உதாரணம் முறையே மொழியின்<br>
விரிந்தநிழல் தருநெடும்பூம் பனைமர மொன்றிற்கு<br>
மிளிறினங்கள் புக்குமுகத்துழுது பெருகுறு தேன்<br>
அருந்து நறுமலர் முதலாயினவும் வேறுள்ள<br>
அணிமரமும் கல்முதலாயினவும்போலாமால். (௨௫)

நூல்களிலும் யோகநூல்களிலும் மற்றும் சில விசிஷ்டாத்துவித நூல்களிலும் பல சைவநூல்களிலும் அத்துவிதிகளை வேதாந்திகளென்றே பெயரிட்டழைக்கின்றார்கள். மாபாரதம் முதலிய வார்ஷ நூல்களிலும் மகிம்னம் முதலிய தெய்வநூல்களிலும் ரகுவம்சம் முதலிய மானிட நூல்களிலும் இம்மதஸ்தரை வைதிகரென்றுசொல்லுகின்றார்கள். இங்ஙனமாக இம்மதஸ்தரை அத்துவிதிகளென்றாவது, வேதாந்திகளென்றாவது, வைதிகரென்றாவது சொல்லாமல் அவற்றை விட்டு வீணில் தம்மவர் மட்டும் வைத்த பேரைக்கொண்டு கேவலாத்துவிதிகளெனச் சொல்வது மரபன்று; நன்றுமன்று.

இதன்பேரில் அத்துவிதிகளை மாயாவாதிகள் என்று கூறுகின்றார். இதன் காரணம் நமக்குப் புலப்படவில்லை. மாயையை முதற்காரணமாகச் சொல்லுங்காரணத்தால் சித்தாந்த சைவரான இந்தப் பரசமய கோளரியே மாயாவாதியாக, பிரமத்தை முதற்காரணமாகச் சொல்லும் பிரமவாதிகளான அத்துவிதிகளை மாயாவாதிகளெனக் கூறுவது நியாயமன்றே. அவரவரது காரணப்பெயர் அவரவர்க்கிருப்பது நியாயமாமேயன்றி மற்றவர்க்கிருப்பது நியாயமன்றே. மாயாவாத விஷயமாய் இப்பத்திரிகையில் பலவிடங்களிற் பேசியிருப்பதையுய்த்துணர்ந்து, அவற்றிற்கெல்லாம் பதில்விடுத்து, பின்னர்ப்பிறரை மாயாவாதிகளென வரையக்கடவராக. அத்துவித விஷயமாய் எழுதியவைகளுக்கு இப்பிரம வித்தியாபத்திராசிரியரே சமாதானம் எழுதியிருக்கின்றமையால் அதன் பொருளை ஆண்டுத் தெரிந்துகொண்டு சமாதானப் படுவாராக.

பரசமய கோளரி, "சேதனசேதனப் பிரபஞ்சங்கள் தன் ஜாதி "அந்நியஜாதியாய் நிலைபெறவும், தன்னின் வேறாயொரு பொருளு "மின்றி யென்று அவர் (அத்துவிதிகள்) அங்ஙன மின்மைப்பொருள் "கொள்வ தெற்றிற்கோ" என்கிறார். இதற்குச் சமாதானந் தெரிந்து கொள்ள மாட்டாதவர் பரசமய கோளரியென்று பேர்பெற்றிருப்பது சாதாரணமனிதன் சக்கரவர்த்தி யென்று சொல்லிக்கொள்வது போலாம்.

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய

## வேதாந்த சூடாமணி.

திருந்திய வேதாந்த நூலியம் புறுவதிருக்கு  
திரிசிய மென்றிரு பொருள் அங்கவற்றின் முதல் திருக்கின்  
வரைந்திடுவ சுவகதந் தன்சாதி விசாதிகளாம்  
மற்றவை மூன்றினுக்கும் உதாரணம் முறையே மொழியின்  
விரிந்தநிழல் தருநெடும்பூம் பணைமர மொன்றிற்கு  
மிளிறினங்கள் புக்குமுகத்துமூது பெருகுறு தேன்  
அருந்து நறுமலர் முதலாயினவும் வேறுள்ள  
அணிமரமும் கல்முதலாயினவும்போலாமால். (உரு)

நிரவயவ மாதலினானும் சத்துவேறு
நிகழாமையானும் இறைதனக்கு முதல்நடுவின்
றொருவுறுக இவ்வுலக காரணமா மாயை
யுண்மையின விறுதியது இல்லென்ப தென்கொ லென்னில்
வரைவுதரு சித்திரிகன் சித்திர சத்தியைப்போல்
மாயையும் சின்மாத்திரமாம் பிரமத்தின் வேறாத்
தெரிவதிலாமையி னென்றும் சச்சிதானந்த
சிவத்தினுக்கு விசாதியிலை யென்றுணர்க தெரிந்தே (உசு)

இச் செய்யுளின்படி சச்சிதானந்த சிவத்தினிடத்தில் சுசாதிவிசாதி சுவகத பேதங்களில்லையென்று ஏற்படுகின்றது. மரத்துக்கு மற்றொரு மரம் சுசாதி; அதாவது மரத்தைப்போன்ற சாதி. விசாதி கல்; அதாவது மரத்துக்கு வேறு சாதி. சுவகதம் தன்னிடத்தி னின்றுந் தோன்றித் தன்னைவிட்டு நீங்காதிருத்தல்; அது மரத்தினின்றுந் தோன்றிய பூ, பிஞ்சு, காய், பழம், கொடி, வேர் முதலியன. இது போல உவமேயமாவது சிவசாதியைப்போல் வேறேயொருபொருளுமில்லை; சிவசாதிக்கு வேறு சாதிப்பொருளுமில்லை; சிவத்தினின்று முண்டாய தொரு பொருளுமில்லை யென்பதாம். இவ்வாறு பகர்வதால் சிவ மொன்றே யுள்ளதென்றும் அதைத்தவிர மற்றொரு பொருளில்லை யென்றும் ஏற்படுகின்றன. ஷை செய்யுள்களின் கருத்தும் வேதாந்தி களுடைய சித்தாந்தமும் இதுவேயாம்.

“ ஏகஏவருத்ரோ நத்விதீயாயம்
ஏகோருத்ரா ஏகமே வாத்விதீயம்.”

என்பதாதிப் பலவேதாந்த வாக்கியங்களில் ‘ஏகம்’ என்பது சுவ கத பேதத்தையும் ‘அத்துவிதீயம்’ என்பது சுஜாதி விஜாதி பேதத் தையும் குறிப்பதைப் பலவிடங்களிற் காணலாம். இதிற் சுவகதபேத த்தைப் பற்றி ஷை பரசமய கோளரி யாதும் பேசினாரில்லை. சுஜாதி விஜாதிகளைப் பற்றி மாத்திரமே பேசுகின்றார். வேதாந்திகள் சுசாதி விசாதிக ளில்லையென்பதற்குப் பதிலாக, அவையுள்ளன வென்று சொல்லுகின்றார் பரசமய கோளரியார். சிவமோ ஞான வடிவாயுள் ளது. அதற்குச் சுசாதி மற்றொரு ஞானவடிவப் பொருள்; விசாதி அஞ்ஞான வடிவப்பொருள். இவ்விரண்டு மில்லையென்பது வேதாந்தி களுடைய் கொள்கை. பரசமய கோளரியோ, அவை யுள்ளன வென் பதற்குச் சேதனுசேதனப் பிரபஞ்சங்களைக் காட்டுகின்றார். சேத னம் ஜீவர்கள்; அசேதனம் பஞ்சபூதாதி வுலகங்கள். “இவையுள்ள படியால் சிவத்துக்குச் சுசாதிவிசாதிகளில்லை யென்று வேதாந்திகள் சொல்வது தப்பு; உள்ளன வென்றே சொல்ல வேண்டும்” என்பது கோளரியின் தீர்மானம்.

இனி, நாம், நியாயநெறியே நின்று அதனுண்மையை ஆராய்ந் திடுவாம். வேதாந்திகள் மரத்துக்கு மற்றொருமரம் சுஜாதியென்றும்,

கல் விஜாதியென்றுங்கூறி, இவ்வுவமானப்படி சிவத்தினிடத்தில் அந்த ஜாதிப் பொருளும் வேறுஜாதிப் பொருளும் இல்லை யென்கிறார்கள். மரம் கண்டமான வியஷ்டி யேகதேசப்பொருளானமையின் அதைப் போன்ற சுஜாதிப் பொருளாவது வேறு ஜாதிப்பொருளாவது அதை விட வேறாக வேறு இடத்திலிருக்கக்கூடும். சிவன் அங்ஙனங் கண்டமான வியஷ்டி யேகதேசப் பொருளன்றே. அது நீக்கமின்றி யெங்கும் பூரணமாயிருக்கும் பொருளாயிற்றே. அது இல்லாவிடமின்றே. இல்லா இட மிருந்தாலன்றோ மற்றொரு பொருள் அந்த ஜாதியாக வாவது வேறு ஜாதியாக வாவதிருக்கக்கூடும். அங்ஙன மின்மையான் சிவத்தைவிட வேறு பொருள் இருத்தல் கூடுமென்பது பொருந்தாது. சேதனா சேதனப்பொருள் நிலைபெற்றிருப்பதா யெழுதுகின்றாரோ. எவ்விதமா யிருக்கின்றது? எவ்விதமா யிருக்கக்கூடும்? மரமும் சத்து; மரத்தைப்போல மற்றொருமரமும் சத்து; வேறு ஜாதியான கல்லுஞ் சத்து. அவ்வாறு சிவமுஞ் சத்து; சிவத்தைப்போல அவர் சொல்லுகிற சேதனமாயுள்ள ஜீவர்களும் அசேதனமாயுள்ள உலகுஞ் சத்தாக வேண்டும். மரம் ஒன்று; மரத்தைப்போல மற்றொரு மரமொன்று; மரத்துக்கு வேறான கல் ஒன்று ஆகமூன்றும் வேறுவேறு கண்டப்பொருள்கள். அவ்வகையே சிவமும், ஜீவனும், உலகும் வேறுவேறு கண்டப்பொருள்களாக வேண்டும். சிவன் எவ்வளவு சத்தோ, அவ்வளவு சத்து ஜீவ உலகங்களுக்குச் சொல்வதில் இவ்வளவு அனர்த்தங்க ளுண்டாகின்றன. சிவத்தைவிட வேறு அன்னியப் பொருளில்லை யென்பதற்குப் பிரமாணங்கள் வருமாறு:—

சர்வசாரோபநிஷத்.

ஸஜாதிய விஜாதிய பேதமற்றது சத்தியம்.

வராகோபநிஷத் உ-வது அத்தியாயம்.

சத்தியமான பரப்ரம்மம் நான்; என்னைத்தவிர வேறேயாதொன்றுமில்லை.

ஷை ச-வது அத்தியாயம்.

சிவனைக்காட்டிலும் வேறொன்றுமில்லை.

சூதசங்கிதை பிரமகீதை

ஐதரேயவுபநிடதார்த்த முரைக்கும் அத்தியாயம்.

சின்மாத்திரமாயுள்ள வெறுஞ்சிவனே திகழ்வான் யாதுக்கும்,
மூன்மாத்திரமும் வேறில்லை முற்றுமவனே. (உ)

ஷை ஷை சாந்தோக்கியவுபநிடதத்தின் ஆறமத்தியாய அர்த்தத்தை
உரைக்கும் அத்தியாயம்.

உலகம் யாவும் உயிர்பலவும் நானே சிறிதும் வேறில்லை. (கககு)

ஷை ஷை கேனேபவுபநிடதார்த்த முரைக்கும் அத்தியாயம்.

தீதாக நன்றேயாகச் சிவனலாதில்லை (உசு)

மெய்ப்பரமன்றனையொழிய வேறொரு மாயையுமில்லை. (உள)

பொருவில் பராநந்த பரிபூரண மெய்ச்சுடராகுந்
தெரிவரு மாதேவ னல்லாற் றிகழ்வதொரு சிறிதுமிலை. (உஅ)

இதுவே முடிந்தகில மெல்லாத்தர்க்கங்களுக்கும் காட்சியே
முதலாம்பிர மாணங்களுக்கு மொழியும் வேதாந்தங்களுக்கும்
விதமாம் புராணமனைத்தினுக்கும் மிருதிகளுக்கும் வேதத்தின்
மதமாம் விச்சையனைத்தினுக்கும் மன்னுமா பாரதத்துக்கும், (உகூ)

ஐயன்சைவாகமங்கட்கும் அரியாகமங்கட்கும் எனது
பொய்யின்றிய ஆகமத்துக்கும் புத்தாகமங்கட்கும் அருகன்
செய்யும் ஆகமத்துக்கும் சித்தரியக்கர்கந்தருவர்
உய்யும்பரிசு மற்றுள்ளோருரைத்த ஆகமங்கட்கும். (ஙo)

ஷை ஷை சாந்தோக்கிய வுபநிடதத்தி னறமத்தியாய அர்த்தத்தை
யுரைக்கும் அத்தியாயம்.

பேராதுவிளங்குகின்ற பிரமமே பிறிதொன்றில்லை. (சஅ)

ஆதரமுடையீர்கேண்மின் அருமறைப் பொருளீதென்றே
ஓதலால் உவமையில்லாப் பொருளிதிலைய முண்டேல்
தீதறமழுவைக்காய்ச்சிச் செங்கையி னிடுவேனென்றுன்
நாதனுபு லகமெல்லாம்படைக்கும் நான்முக னுயுள்ளோன். (சுகூ)

பத்தராயுள்ளீர் கேண்மின் பகர்ந்த வேதத்தின் அர்த்தம்
இத்தகைத்தாகும் வேறொன்றில்லையாம் இதனில் உங்கள்
சித்தம் நம்புதலுண்டாகச் செப்பினேம் ஆணையூன்றே
டத்தனுர் பாதந்தொட்டே யென்றனன் அலரின்மேலோன். (சுள)

அன்பராயுள்ளீர் கேண்மின் அறிவித்தபொருள் மெய்யன்றேல்
என்சிரம் இற்றுவீழ்வ தென்றனன் இதுவுமன்றி
இன்பமே யளிக்குமீசன் இவ்விடந் தன்னின்வந்து
தன்பெருங் கருணையாளுந் தளர்வறப் பண்ணுகின்றுன். (சுஅ)

நானேமுழுதும் எனையொழிய நாடிற் சிறிதும் வேறில்லை.
(இதுபரமசிவன் சொன்னது) (கஉச)

ஸூதசங்கிதை நித்தியவத்து விசாரமுரைத்த அத்தியாயம்.

முக்கண் செழுமறைக்கொழுந்தினை யன்றி, யருத்தியுற்
றுயின் நித்தியவத்து வேறிலை யழலிடைசிவப்பப்,
பொருத்திய மழுவை நாவிடைவைத்துப்
புகலுவன் யானிவ்வா றென்றும். (கரு)

கூர்மபுராணம் ஈசுரகீதை

சாங்கியயோக அத்தியாயம்.

ஆதலால் எல்லாமாகி நின்றது மறிவே வேறென்றேதிடக் கண்
டதில்லை. (நஅ)

### இலிங்கபுராணம் தியானவிதியுரைத்த அத்தியாயம்.

விரிந்த பூதங்களினேடு விளம்பிந்தியங்கள் தத்துவங்கள்
திருந்தா அகங்காரத்தினெடு செறிமுக் குணங்கள் மாத்திரைகள்
பொருந்துமாயை சீவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி
யிருந்தெவ்விடத்து நிலைபெறுவோம்அதனுல்தாணுவெனஇசைப்பார்.

### பாரதம் பகவற்கீதை

விபூதியோக அத்தியாயம்.

இரும்புவன மனைத்திற்கும் வித்துநான் என்னைப்போக்கி யாது மில்லை.
(உரு)

### பாரதம் உத்தரகீதை இரண்டாவது அத்தியாயம்.

சுசாதீய விசாதீய சுகதபேத ரகிதமான பிரமத்திலே ஐக்கிய மடைந்தது.
(எ)

### ஞானவாசிட்டம்.

ஒருபொருளாம் பிரமமாத்திரமே யல்லா லுபயமெனுங் கற்பனைப்பே ரொன்றுமில்லை.
(கக)

### திருவாசகம்.

நீயலால்பிறிது மற்றின்மை சென்று சென்றணுவாய்த்
தேய்ந்துதேய்ந்தொன்ருந் திருப்பெருந்துறையுறை
சிவனே யொன்று நீயல்லை யன்றியொன்றில்லை.

வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மையுன்னை விரித்துரைக்கின்,

இதன்மேல் "சித்தாகிய பரப்பிரமப்பொருள், மெய்ப்பொருளு "மன்றிப் பொய்ப்பொருளுமன்றி அநிருவசனமாய் நிற்கு மாயையிற் "கண்ணாடியி னிழல்போல அத்தியாசமாய்த் தோன்றும்; அத்தோற் "றமே திரிவுகாட்சியில் சகஜீவபரங்களாய்க் காணப்படும்; உண்மைக் "காட்சியில் அவை அசத்தியமாய் ஒழியும்; ஆதலால் அங்ஙனம் இன் "மைப்பொருள் கொண்டு அவ்வாறு உரைப்பரெனின், உண்மையில் "பரப்பிரம மொன்றேயன்றி வேறு பொருளில்லை யென்னுமவர், அத "னேடு முரணிப்பரப்பிரமத்துக்குவேருக அங்ஙனமாயையென்றொரு "பொருள் உண்டென்றல் மேற்கொள் மலைவாம். இனி மாயை மெய்ப் "பொருளென்றுஞ் சொல்லப்படாது, பொய்ப்பொருளென்றுஞ் சொ "ல்லப்படாது, அநிருவசனமாய் நிற்பதொன்றென்று அவர் (அத்து "விதிகள்) கூறுகின்ருர். மெய்ப்பொருளுமன்றிப் பொய்ப்பொருளு "மன்றி நிற்ப தொன்றுண்டென்று எடுத்துக்காட்டுதற்கு ஒருபொரு "ளின்மையின், அது அநுமான அளவைக்கு ஏலாதாம். அநுமான "அளவைக் கேலாதாகவே ஆகம அளவைக்கும் ஏலாதாம். ஆகவே "அவர் கூறும் மாயை சூனியமாவதன்றி உள்பொருளாத லில்லை" என்று வரைந்தார். பரசமய கோளரி வேதாந்த சாஸ்திர சோதனை

செய்யாமலும் அஃதுணர்ந்த பண்டிதரிடத்து விசாரியாமலும் அது
குற்றமுள்ளதென்று தாமே தீர்மானஞ்செய்தும், இவ்வகைப்பட்டவர்
குற்றங்கூறி யெழுதிவைத்த நூல்களைப் பார்த்து நம்பியும் எழுத
வந்தாரோயன்றி, அதனுண்மையை யுணர்ந்தார்பால் கேட்டு அதன்
பொருளை யுய்த்துணர்ந்தாரில்லை. கோளரி கற்றவரோயாயினும் நிராகர
ணஞ்செய்யவந்த நூல்களைக் கற்றாரன்று; கற்றாராயின் அச்சித்தாந்தத்
துக்கு மாறாகப் பேசார்; அதன் பூர்வபக்க சித்தாந்தங்களை யுணரா
மற் போகார். இவரெழுதுவதைக் கவனிக்கின் இவருக்குத் தருக்க
நூலுணர்ச்சியும் இவர் சித்தாந்தமென்று கொண்டாடும் ஆகம வுண
ர்ச்சியும் இல்லையெனப் புலப்படுகின்றது. எங்ஙனமெனின் 'அநு
மான அளவைக்கு ஏலாதாகவே ஆகம அளவைக்கும் ஏலாதாம்'
என்றதனாலென்க. இஃதுண்மையாயின் அநுமான அளவையைக்
கொண்டே ஆகமத்தா லளக்கப்படும் பொருளையும் அறியவேண்டும்;
அங்ஙனமாயின் ஆகமம் வீணாயிற்று. ஆகவே இவரது ஆகம ஆராய்ச்
சியும் ஆகம சிரத்தையும் நன்கு வெளியாயின. அநுமான அளவை
க்கு ஏலாதது ஆகம அளவையால் அறியற்பாலதன்றென்றால், கோ
ளரி, அர்த்தசந்திர நிரோதாதி வஸ்துக்களையும் அநுமானிப்பார்போ
லும். அதற்கு ஏது, பக்கம், வியாத்தி இவைகளையுஞ் சொல்லக் கோ
ளரி வல்லார்போலும். இவர், அத்துவிதிகள் மாயையைச் சிவத்துக்கு
வேறாகச் சொல்வதாயும், அவர்கள் மாயையை அநிருவசனீயமென்
று சொல்வது குற்றமென்றும், அவ்வாறுசொல்வதற்கு மேற்கோளாக
வொருபொருளு மில்லையென்றுங் கூறினாரன்றா? அவ்வாறு மாயை
யைச் சிவத்துக்கு வேறாகச் சொல்பவர் அத்துவிதிகளன்றே; அதை
யொருபொருளாகச் சொல்பவரும் அத்துவிதிகளன்றே. பின்னை வே
றாகவும் பொருளாகவும் சொல்பவர் இவரும் இவர்போன்றாருமாம்.
வேதாந்திகள் மாயையை யொருபொருளாகக் கொள்ளாமையாலும்,
சத்தியாகக் கொள்வதாலும், சத்தி குணமாதலாலும் வேறென்று
சொல்லவுமில்லை; சொல்லவுமாட்டார்கள்; அப்படிச்சொல்வதற் கே
ற்ற வேதமுதலிய சத்பிரமாணங்களு மில்லை. தம் சித்தாந்தத்தைப்
பிறர் சித்தாந்தமாகக் கொள்வது திரிபுணர்ச்சியாம். இனி மாயையை
அநிர்வசனீயமென்று சொல்வது குற்றமன்றெனவும், அதற்கு மேற்
கோள் ஒருபொருள், இருபொருளன்று, உலகின்கணிகழும் எல்லாப்
பொருள்களுமே அவ்விலக்கணம் அமையப் பெற்றனவெனவும் விள
க்குவாம். உலகம் சத்துப்பொருளா? அசத்துப்பொருளா? சதசத்
துப்பொருளா? அநிர்வசனீயப் பொருளா? இவ்வினாவுக்கு விடை
யாது? இக்கோளரி உலகைக் காரியமென்று கூறும் வகுப்பிற் சேர்ந்
தவரோயன்றிமற்றப்படியன்று. காரியம் என்னவிலக்கணமுடையதோ,
அந்த இலக்கணத்தை யுலகத்திற்கு அமைத்துக்கொள்ளலாம். திருட்
டாந்தமாகக் குடங் காரியம்; மண் காரணம். காரணமான மண்ணினி
டத்துக் காரியமான குடம் சத்தா? அசத்தா? சதசத்தா? அநிர்வசனீ

யமா? சத்தெனின் மண்ணைப்போல் முக்காலத்தும் இருத்தல் வேண்டும்; அசத்தெனின் ஆகாயதாமரையைப்போல முக்காலத்துமில்லா திருத்தல்வேண்டும்; சதசத்தெனின் எதிர்மறை யிலக்கண மமைந்த பொருளிருந்த தில்லை. சத்து, அசத்து, சதசத்து ஆகிய இம்மூன்றிலக்கணமும் அமையாதபோது வேறு என்ன இலக்கணம் சொல்கிறது? இப்படிப்பட்ட இலக்கணமென்று சொல்லப்படாதெனப் பொருள்கொள்ளும் அநிர்வசனீயமென்றுதானே சொல்லவேண்டும். இதைவிட வேறுமார்க்கமிருந்தால் கோளரி வாய்திறந்து சொல்லட்டும். குடமொன்றுதானு இவ்விலக்கண முள்ளது? எந்தப் பொருளுமேயாம். எது எது காரியமோ, அது அது வெல்லாமும் இந்த இலக்கணந்தான். ஆடையைச் சோதிக்கின் காரணமாய நூலையன்றியும், வீட்டைச் சோதிக்கின் காரணமான தரை, கூரை, சுவர், கதவு, ஜன்னல் முதலியவை யன்றியும் புத்தகத்தைச் சோதிக்கின் காகிதம், அட்டை இவற்றையன்றியும் இல்லாதிருக்கக் காண்கின்றோம். இவ்வளவுதூரம் போவானேன்? நமது பரசமயகோளரியின் உடலையேயாராய்ந்து பார்ப்போம். உடலென்னும் பதத்துக்குத் தலை, கழுத்து, கை, மார்பு, இடுப்பு, கால்முதலிய வுறுப்புகள்தானிருக்கின்றன. இந்த உறுப்புகளையன்றி யுடலென்னும் உறுப்பிக்குப் பொருளில்லை. உறுப்புகள் சேர்ந்தே உடலாயிற்றென்னின் உறுப்புகள் சேர்ந்தால் உறுப்புகளிருக்குமேயன்றி மற்றொன்று வாராதே. தலைமுதலியன உறுப்புகள்; உடல் உறுப்பி. உறுப்புகளாயிருக்குங்காலத்தும் உறுப்பியா யிருக்குங்காலத்தும் உறுப்புகளையன்றி வேறு பொருளின்றே. உறுப்பு தலைமுதலியன. அவை உடலான போதும் ஷை தலை முதலியனவே யுள்ளன. வேறு பொருளிருக்கு மென்னின் அப்பொருள் ஒன்றாய்க்கூடுதற்குமுன் இல்லை. வேறு வேறு பிரிந்தபோது மில்லை. முன்னு மின்றிப்பின்னுமின்றி நிகழ்ந்தது இடையிலெங்கிருந்து வரும்? வந்ததென்னின் இல்லது வாராது என்னுந் தருக்கம் பழுதடைந்துபோம். இல்லாதது வருமென்றொத்துக் கொள்ளுங்கால் மலடிமகனும் வரவேண்டும். வாராமையால் இல்லது இல்லதே. அப்படியே உறுப்புகள் சேர்ந்தபோதும் உறுப்புகள் மாத்திர முள்ளன. உறுப்பி யென்பது சொல்லுந் தோற்றமுமாம். ஆதலால் உறுப்புகளிலும் உறுப்பியிலும் ஷை தலை முதலிய பொருள்களே யிருக்கின்றன. வேறு பொருள் வரவு மில்லை; வரவுமாட்டாது. ஆனால் உடலென்பதொன்று காணப்படுகின்றதே யென்னின் காணப்படுவதுண்மைதான். அதை யின்றெனப் பகர எவரானுமாகாது. ஆயின் அது சத்தோ வென்னின் பொருளில்லாமையால் சத்தாகாது; அசத்தோ வெனின் ஆகாய தாமரையைப்போல் முற்றும் அபாவமாய்ப் போகாமையின் அசத்துமாகாது. சதசத்தோவெனின் உள்ளதும் இல்லதுமாய எதிர்மறை இலக்கணப் பொருளிருத்தல் எங்குமில்லை. இங்ஙனம் சொல்லிவிட்டால் போம்வழி யாதென்னின் இவ்வகை யிலக்கணமென்று கூற அமையா

தெனச் சொல்லத்தகும் அநிர்வசனீயமென்றே விளம்பல் வேண்டும். உலகி லெந்தப்பொருளை யாராய்ச்சி செய்யினும் இதுவே யிலக்கணந் தான். இப்படிப்பட்ட இலக்கணமில்லாப்பொருள் உலகில் இல்லவே யில்லை. முடிவாய்ச்சொல்வது யாதெனின் காரியங்களெல்லாம் அநிர் வசனீயமே; அன்றி அவயவங்களெல்லாமும் அநிர்வசனீயமேயாம். இங்ஙனமாகவின் 'மெய்ப்பொருளுமன்றிப் பொய்ப்பொருளு மன்றி நிற்பதொன்றுண்டென்று எடுத்துக் காட்டுதற்கு ஒரு பொருளின்மை யின்' என்று கூறிய கூற்றுக் கூற்றினுங் கூற்றாயினவாறறிக. உலகமுற் றும் அனிர்வசனீயமேயாக, அவ்வாறு ஒருபொருளுமின்றெனக் கூறு வது எவ்வாறிருக்கின்றதெனின், ஆற்று வெள்ளத்தி னின்றிருக்கு மொருவன், உலகில் ஒருநீர்த்துளியேனும் இல்லையென்று சொல்வதற் கொப்பாமென்க. இதனால் பரசமய கோளரி பொய் பேசுவதாய்ச் சொல்லவில்லை. அது தனக்குத் தெரிந்த வுண்மையினையே யெடுத்துச் சொல்லிற்று. அதற்குத் தெரிந்தவுண்மை யவ்வளவுதான்; விசாரணை யும் அவ்வளவுதான்; வஞ்சகமில்லை. சமுத்திரமுண்டென்று பார்த்தி ராதவனும் கேட்டிராதவனும் படித்திராதவனும் சமுத்திரமில்லையெ ன்று சொன்னால் அது பொய்யாமா? வீட்டிலுள்ள வொருவன் வெ ளியே போயிருக்கமாத்திரங் கண்டு, திரும்ப வீட்டினுட் சென்ற சங் கதியை யறியாத காரணத்தால், அவன், வீட்டினு ளில்லை யென்பானா யின் அவன் பொய்யனாவனா? அங்ஙனமே, கோளரி, காணப்பட்ட பொருளனைத்தும் இறையளவுகூட மிச்சமின்றி அநிர்வசனீயமாயிருப் பதை யாராய்ந்தறியாது, பொருளல்லவற்றைப் பொருளாகத் திரிபு ணர்ச்சிகொண்டு சொன்னால் அது பொய்யெனப்படுமா? ஒருவன் கயிற் றை யரவாகக் கண்டான்; மற்றொருவன் கயிற்றைக் கயிறாகக்கண் டான். இருவரும் தாம் தாம் கண்டதைக்கண்டவாறு உண்மையைத் தான் சொன்னார்கள். இவரில் ஒருவன் சத்தியவாதியும் ஒருவன் அச தியவாதியுமென்று சொலலக்கூடுமோ? உலகப்பொருள்களெல்லாவற் றையும் வேதாந்தசாஸ்திரங்களில் வல்லார் அநிருவசனீயமென்று சொ ன்னார்கள்; இந்தக்கோளரிக்கு அப்படிப்பட்ட சாஸ்திரம் தெரியாது; அதற்கு மாறான சாஸ்திரங்கள் தெரியும். ஆதலால் அது கற்ற கல் விக்குத் தக்கபடி. யுலகு அனிர்வசனீயமன்று; சத்துப்பொருளே யெனக் கூறிற்று. அதோடு நின்றதா அந்தக் கோளரி? இல்லை இல்லை. எட்டிபெட்டிப் பாய்ந்து அநிர்வசனீய மென்பாருடன் மல்லுக்கட் டிப் போர்புரியவும் எழும்புகின்றது. பூனை, தன் கண்ணை மூடிக் கொண்டு பாலைக்குடிக்குங்கால் அதற்கு எங்கும் இருளா யிருப்பது போல் எல்லோர்க்குமே யிருளாயிருக்குமென்று கருதுகின்றதன்றோ? அங்ஙனமே கோளரியும் தனது விசாரணையிற்றேறிய தீர்மானமே யுல கில் யாவருடைய தீர்மானமுமாமென்று நினைத்துவிட்டது பாவம்! இந்தக் கோளரிக்குக் கபடு தெரியாது. வெளுத்ததெல்லாம் பால், கறுத்ததெல்லாம் நீர் என்பானைப் போன்றது.

உ

பரப்பிரமம் ஒன்றேயெனச் சொல்லி, அதற்கு முரணாக மாயை யென்னு மொரு பொருளுண்டென்று கூறுவதாய் வரைந்ததிலுள்ள குற்றங்களையு மெடுத்துக் காட்டுவோம். பரப்பிரம்மம் ஒன்றேயென்று கூறுவது முண்மையே; அத்துடனே மாயையென வொன்றுண்டென்பது முண்மையே. கயிற்றின்கண் அரவு தோன்றுமானால் கயிறு ஒன்றும், அரவு ஒன்றும் ஆக இருபொருளா? இருபொருளானால் பிரம்மம் ஒன்றும் மாயை யொன்றும் ஆக இருபொருளாகும். இவற்றில் கயிறு யதார்த்தப்பொருள்; அரவு தோற்றப்பொருள், இங்ஙனமே பிரமம் யதார்த்தப்பொருள்; மாயைதோற்றப்பொருள். ஓரேபொருள் மருளுள்ளபோது அரவாகவும் தெருளுள்ளபோது கயிறாகவும் தோற்றுதல்போல் ஓரேபொருள் மருளுள்ளபோது மாயை அதாவது உலகாகவும் தெருளுள்ளபோது பிரமமாகவும் தோற்றுகின்றது. கயிற்றின்கண் அரவு தோற்றுவது முரணாகாது. அங்ஙனமே பிரமத்தின்கண் மாயை தோற்றுவது முரணாகாது. கயிற்றையன்றி அரவு ஒரு பொருளல்ல வாதல்போலப் பிரமத்தையன்றி மாயை ஒரு பொருளல்ல. பொருளல்ல வென்பதற்காக அரவு ஸ்தானத்தில் மாயையை வைத்துச்சொன்னாலும் உண்மையில் அங்ஙனமன்று. கயிறு ஸ்தானத்தில்பிரமமும், அரவு ஸ்தானத்தில் உலகமும், அரவு தோற்றுதற்சேதுவான (கயிற்றின் கண்ணுள்ள) சத்தி ஸ்தானத்தில் மாயையுமாம். கயிறும் சத்தியும் அரவும் விவகாரத்தில் மூன்றாக விவகரிப்பினும் உண்மையி லொன்றேயாம். கயிறுள்ளவிடத்திலேயே சத்தியிருக்கின்றது; சத்தியுள்ளவிடத்திலேயே அரவிருக்கின்றது. அங்ஙனமே பிரமமுள்ள விடத்திலேயே மாயாசத்தி யிருக்கின்றது; மாயாசத்தியுள்ள விடத்திலேயே யுலகிருக்கின்றது. கோளரி, மாயையை யொரு பொருளாகக்கூறுகின்றது. வேதாந்தமதத்தில் அங்ஙனம் மாயை ஒரு பொருளன்று. கோளரியின் மதத்தில்தான் பொருளாகக்கூறப்படுகின்றது. மாயையைப் பொருளாகக்கொள்ளின் பிரமம் ஒரு பொருளும் மாயை யொரு பொருளுமாய் இரண்டுபட்டு அபரிபூரண தோஷத்திற் கிடனாகும். இப்படிப்பட்ட குற்றம் தன்னிடத்தில்வைத்துக்கொண்டு, தன் குற்றத்தை, குற்றமற்றுக் குணமேலிட்ட வேதாந்த மதத்திலேற்றுகின்றது. இந்தச் சாமர்த்தியத்துக்குத்தான் கோளரிப்பட்டம் போலும்! இது வெகுவியப்பு! இனியேனும் பரசமயகோளரி, இதுகாறுங் கொண்டிருந்த திரிபுணர்ச்சியைவிட்டு, வேதாந்தமதத்தில் சிவம் ஒன்றே யுண்மைப்பொருளென்றும், மாயையும் அதன் காரியமான உலகும் போலிப் பொருளென்றும், அநிர்வசனீயப்பொருளென்றும் அறிந்து, பொருளைப் பொருளாகக் கொள்ளும் உண்மையுணர்வு பெற்றுய்வதாக. மாயை, அதன் காரியமான வுலகு இவற்றினை யொரு இடத்தில் இன்மைப்பொருளெனக் கொள்வதற்கும், ஒரு இடத்தில் அநிர்வசனீயப் பொருளெனக் கொள்வதற்கும் நியாயமிருக்கின்றது. கயிற்றையன்றி யரவில்லாமையால் அரவை யின்மைப்

பொருளெனக் கொண்டாலும் வான்மலர்போல் முற்றுமில்லாமற் போதலில்லை யாதலால் அனிர்வசனீயமென்று கூறுதலே யமைவுடைத்து. அங்ஙனமே மற்றொரு பொருளிருத்தற்கிடமில்லாமல் பரிபூரணமுள்ள சிவத்தையன்றி யில்லாமையால் மாயை யுலகங்களை யின்மைப் பொருளென்று சொன்னாலும் வான்மலர்போல் முற்றுமில்லாமற் போதலின்றா மாகலின் அம்மாயை உலகங்களை அநிர்வசனீயமென்றே சொல்லுதல் நியாயமாம்.

'அநுமான அளவைக்கும் ஏலாதாம்' என்பதும் பொருந்தாது. நாம் காட்சியளவைக்கே யுலகை யநிர்வசனீய மென்று காட்டிவிட்டமையானென்க. எங்கே காட்சியளவையில்லையோ, அங்கே அநுமான அளவை வேண்டற் பாற்று. ஆகலின் இங்கு அநுமான அளவை அநாவசியகமாம். 'ஆகம அளவைக்கும் ஏலாது' என்பதும் பொருந்தாது. இவர் கூறும் வண்ணம் உலகு சத்தியம் என்பதற்குக் காட்சியுமில்லை; அநுமானமுமில்லை; ஆகமமுமில்லை.

"நாஸதா ஸீத்நோஸதா ஸீத்ததாநீம் தமஆஸீத்,"

"சத்துமில்லை, அசத்துமில்லை, அன்று தமஸ்ஸாயிருந்தது." இந்த வாக்கியத்தால் தமஸ் எனப்படும் மாயையும் அதன் காரியமான உலகும் சத்துமல்ல, அசத்து மல்லவென ஏற்படுகின்றது.

"யதா தமஸ்தந்ந திவாந ராத்ரிஹி நஸந்ந சாஸத்,"

"யாண்டுத்தமஸ் உள்ளது ஆண்டுப் பகலிரவில்லை. சத்து அசத்து இல்லை." இதனாலும் அதேபொருளாகிறது.

"மாயாமாத்ர மிதந்த்வைதம் அத்வைதம் பரமார்த்ததஃ"

"தோன்றுந் துவிதப்பிரபஞ்ச மெல்லாம் மாயாமாத்திரம்; பரமார்த்தமாயுள்ளது அத்துவிதமே."

"ஞாதேத்வைதந்ந வித்யதே"

"அறிந்தவிடந் துவித மிராது."

"மநஸை வேதமாப்தவ்யம்நேஹநா நாஸ்திகிஞ்சந"

"இவ்வுலகாதிகளை மனதாற்றான் அறியலாம். உண்மையில் இங்கு பல பொருள்கள் இல்லை."

"அதோந்யந் சகலம் ம்ருஷா"

"அவனில் வேறு எதுவும் மிச்சை."

"ததே வார்த்தம் தது சத்திய மாஹுஃ"

"அஃதொன்றே சத்தியம், அஃதொன்றே முற்றறி வென்பார்." என்பதாதி சுருதிகள் பல பிரமாணமாம். சுருதிகளில் எங்கும் பிரபஞ்சம் சத்திய மென்கிற வசனமேயில்லை. கோளரி ஆயிரம் வருஷம் ஜீவித்

திருந்து அவ்வளவுகாலம் ஆராய்ந்து தேடினும் பிரபஞ்சம் சத்திய மென்கிற வசனம் ஒன்றுகூட அகப்படமாட்டாது. வேதாங்கங் களிலும் அங்ஙனமே. மாபாஷியத்தில் ஆசிரியர் பதஞ்சலியார்

"ஸ்திரியாம்"

என்னுஞ் சூத்திரத்தில்

"அசத்து ப்ருகத்ருஷ்ணவத்கந்தர்வ நகரம் யதா"

என்று ஆசிரியர் வரருசியார் வார்த்திகத்தைப் பொருள்செய்யு மிடத்து "உலகுகானனீர் கந்தர்வ நகர் போன்ற" தென்றார். கையடனு ரும்

"அசத்யோ பாத்யவச்சின்னம் ப்ரம்மத்வமேவவாச்யம்சவாசகம்ச"

"அசத்தியமான வுபாதிகளால்வரையப்பட்ட ப்ரம்மதத்துவமே வாச்சியமே வாசகமாயும் உள்ளது" என்றார். வாக்ய பதியத்தும்

"சம்பந்தி பேதாத் சத்தேவ பித்யமானு கவாதிஷு"

உபாதி பேதத்தால் சத்தையொன்றே. கோ முதலிய பொருட்களின்கண் வேற்றுமைப் பட்டதுபோற் றோன்றுகின்றது என்றார். ஸ்காந்தபுராணம் விஷ்ணுபுராணம் கூர்மபுராணம் மாபாரத முதலிய புராணேதிகாசங்களிலும் இம்மாதிரிப்பல்லாயிர வசனங்களுள்ளன. வித்தியாஸ்தானங்களெனப்படும் பதினான்கனுள்ளும் அசத்தியமென்றும் சதசத்விலக்ஷணமென்றுமே கூறுகின்றன. அனிர்வசனீய மென்னும் சொல் சதசத்விலக்ஷணம் என்பதற்குப் பரியாயமாக வுபயோகிக்கப்படுகின்றது. ஆதலால் சேதனு சேதனப் பிரபஞ்சம் அசத்தியம் அல்லது அநிர்வசனீயமென்பதற்கு யாதொரு ஆக்ஷேபமுமில்லை என்பது வச்சிரலேபமாக நாட்டப்படுகின்றது.

சூதசங்கிதை வேதார்த்தத்தை யுரைத்த அத்தியாயம்.

சாற்றுமாயாநிவர்த்திதான் அதிட்டானமாய
தோற்றுசைதன்னியத்தின் சொரூபமானது மற்றின்ப
மாற்றுமந்நிவிர்த்திதானும பாவமா மனையமாயை
மாற்றருஞ் சதசத்திற்குப் பின்னமாய் வயங்குமாலோ. (சு)

யசுர்வேதம் சர்வஸாரோப நிஷத்.

(12) மாயை யென்பது யாது?

அநாத்துமாவுக்கு மூலமான தெதுவே, அது தான் மாயை. அவளானவள் ஆகாசத்தில் மேகம் முதலியவைபோல் பிர்ம்மத்தினிடத்தில் காணப்படுகிறாள். அந்த மாயை யானவள் அநாதி. முடிவை யுடையவள். பிரமாணுப்பிரமாணங்களுக்குப் பொதுவானவள். இருக்கிறவளுமல்ல; இல்லாதவளுமல்ல; அவ்விரண்டுங் கலந்தவளுமல்ல. வாக்குக் கெட்டாதவள். (பிர்ம்மமாகிய) அதிஷ்டானத்திலேயே யில்லாதவள். வித்துவான்களினால்வர்ணிக்கப்படுகிற ஏற்றக்குறைச்ச

லான பேதவிவரங்களை யுடையவள். எவள் வாஸ்தவத்தி லில்லையோ
அவள்தான் மாயை. அவள் சுவரூபம் அஞ்ஞானம். அது தான்
மூலப்பிரகிருதி.

### மாபாரதம் உத்தரகீதை முதல் அத்தியாயம்.

இந்தக்காரண சரீரமென்கிற அவ்வியாகிருதம் சத்துமல்ல, அச
த்துமல்ல, சதசத்துமல்ல, பின்னமுமல்ல, அபின்னமுமல்ல, பின்னா
பின்னமுமல்ல, சாவயமுமல்ல, நிரவயமுமல்ல, சாவயவ நிரவயவமு
மல்ல.

### வேதாந்த சூடாமணி திருசிய விவேகம்.

*பின்னமோடசத்து சாவயவமு மெதிர்மறையும் அவைபிரிந்து தம்மின்*
*மன்னியவு மொழிந்த நிர்வாச்சியமாகு நவவித மம்மாயை யெய்தும்.* (௫௭)

### கைவலிய நவநீதம்.

அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையால் அவாச்சியவடி
வாகும்.

### சூதசங்கிதை வேதாவிரோத முரைத்த அத்தியாயம்.

ஏற்றமுத்தி காலத்தில் சிலர் சகத்துக் கபாவம் வருமென்ப ரிவ்
வா, றுற்றவுரைப்பது பிராந்தியினாலே பாவவத்துவா யிருந்தால், சாற்
றுமபாவஞ் சொலலாந்தயங்குசகம் பாவா பாவவத்துவிற்கு, வேற்று
மையா யிருத்தலினா லதற்கபாவங் கூறல் விரோதமாமால். (௧௭)

இவ்வாறு சொல்லிவிட்டு 'அவர் கூறும் மாயை சூனியமாவதன்
றி உள்பொருளாதலில்லை' என்று கூறினார். சூனிய மென்பதற்குப்
பொருள் அபாவமா? வேறா? எங்ஙனமாயினும் அதற்குமுன்பே
சமாதானங் கூறிவிட்டோம். "அத்தியாசத்தோற்றம் ஜடப்பொருள்
"கட்கன்றிச்சித்துப் பொருளுக்குக் கூடாதாம். கூடுமெனின், அது
"சித்தாதலில்லையாம். ஆகவே, சித்தாகிய பரப்பிரமம் அசித்தானமா
"யையில் அங்ஙனம் அத்தியாசமாய்த் தோன்று மென்பதும் அவசித்
தாந்தமாம்" என்றும் ஒரு விசேஷங் கூறுகின்றார். அத்தியாசத்
தோற்றம் ஜடப்பொருளுக்கு மாத்திரங் கூடுமென்றும் சித்துப்பொரு
ளுக்குக் கூடாதென்றும் இவர்க்குச் சொன்னவர் யாவர்? இவர்சொல்
ராஜாக்கினையா? அதிலும் சுக்கிரீவ ஆக்கினையா? சித்தில் ஜடந் தோ
ன்றுதென விசாரணையற்ற விவர் முன்னோர் எவரோ சிலர் எழுதி
வைத்த நூலைப்பிரமாணமாகக்கொண்டு நம்பி,கோளரிப்பட்டம்பெற்ற
இவரும் இவரினத்தாரும் எழுதிவருகின்றார்களேயன்றி, சுய ஆராய்
ச்சி செய்து சுருதி யுக்தி அநுபவங்கட் கொத்துப்பார்த்து எவரும்
எழுதுகின்றார்களில்லை. இவ்வொரு விஷயத்தில் மாத்திரமன்று; அ
னேக விஷயங்களில் இவ்வகையே பேசி ஏமாந்து அவமானப்படுகின்
றனர். கூடுமென்று எத்தனையோ வருஷங்களாக இப்பிரமவித்யாவில்
பலமுறை பலபேர் திருட்டாந்த வாயிலாகக் காட்டியிருக்க, இந்தக்

கோளரி கூடாதென்று சொன்னால் கூடாமற் போய்விடுமோ? 1888 ஆவ்த்துப் பிரமவித்தியாவில் "அத்வைதி" யெனக் கையொப்பமிட்டு இந்துஜனபூஷணியில் ம-ள-ள-ஸ்ரீ ரூனா சோமசுந்தர நாயகர் எழுதியதை மறுத்து "ஓர் நண்பர்" என்பவர் பதிலுரைத்தபோதும், (இது "தத்துவவாதம்"என்னும் புத்தகத்திலிருக்கின்றது.) 1892ஆவ் பிப்ரவரிமீ 1௳ பிரசுரமான 24-வது பிரமவித்தியாவில் யாழ்ப்பாணம் "இந்துசாதனப் பத்திரிகையின் கடவுள் நிச்சயம்" என்னும் விஷயத்திற்காகத் "தத்துவவிசாரணைபுரிவோன்" என்பவர் பதிலெழுதியபோதும், ப்ரம்மவித்தியா நந்தனஆவ் ஆடிமீ த்து 11-வது பத்திரிகையில் சோமசுந்தரநாயகரைமறுத்து "ஓர்இந்து" என்பவர் எழுதியபோதும், இன்னும் வேறு இடங்களிலும் சமாதானமெழுதியிருக்கவும் அவைகளையெல்லாம் பூர்வபக்ஷம்பண்ணி, அதன்மேல் தம்கக்ஷிக்குப் பலங்காட்டி யெழுதாமல் பெயர்த்தும் சித்துப்பொருளுக்கு அத்தியாசங்கூடாதென்று கூறுவது பிறர்க்குத் தகுதியேனும் பகிரங்கமாய் வெளியேறிக் கர்ஜ்ஜித்துநிற்கும் இந்தக் கோளரிக்குத் தகுதியன்று, அன்று. ஆயினும் இப்போது நமதுகடமைக்குஞ் சிறிது கூறுவாம். இந்தக் கோளரியானவர், தாம் முன்னர்க் கண்ணிற் கண்டவொரு பொருளினை அஃதில்லாக்காலத்து, அதை யிடைவிடாது நினைப்பாராயின், அஃது கண்ணுக்கன்று, மனத்திற்குப் புலப்படும். புலப்படும் பொருளோ ஜடம்; மனமோசித்து, இதில் சித்திலிருந்து ஜடமுண்டானவாறறிக. கண்ணுக்குத்தோற்றவில்லையே யென வினவலாம். இந்தத்திருட்டாந்தம் சித்திலிருந்து ஜடமுண்டாகு மென்பதற்கேயாம். கண்ணுக்குத் தோற்றுந் திருட்டாந்தமுங் கூறுகின்றோம். சுரமுதலிய வியாதி மேம்பட்டுச் சீதளங்கண்டபோது, இவ்வுலகப்பொருளல்லாத வேறு ஏதேதோ அந்நோயாளியின் கண்களுக்குத் தோன்றுகின்றன. அந்தப் பொருள்களெல்லாம் ஜடந்தான். அவைகளுக்கு முதற்காரணம்யாது? மனமன்றோ? அம்மனஞ் சித்தல்லவா? கனவில் காணும் பொருள்கள் எங்கிருந்துண்டாகின்றன? மனத்தினின்றல்லவா? மனம்சித்தல்லவா? அப்பொருள்கள் சித்தாகிய மனத்தினின்றுந் தோன்றிய அத்தியாசப் பொருள்களல்லவா? இது தினந்தினம் அநுபவமாயிற்றே. சோமசுந்தரநாயகர் கூறியதுபோல் சொப்பனவுலகம் அத்தியாசப்பொருளல்ல; சத்தியமென்பாரோ? அங்ஙனமாயின் அவர்க்கு ஓர் நண்பர் கூறிய சமாதானத்தைப் படித்துப்பார்த்து அதைப் பூர்வபக்ஷஞ்செய்து அதன்மேல் சொப்பனவுலகு சத்தியமென்று சாதித்துக்கொள்ளட்டும். அப்படித் தாபிப்பாராயின் நாம் உடனே சொப்பனம் சத்தியமன்றெனத்தாபித்துப்பூர்வபக்கஞ்செய்கின்றோம். இவர்அப்படிச்சொப்பனம் சத்தியமென்றுதாபிப்பாராயின் ஐந்துவருஷகாலமாய் ஓர்நண்பர்க்குப் பதில்கூறாது தத்தளித்து ஆதாரமின்றி விழித்துக்கொண்டிருக்கும் சோமசுந்தநாயகரைக் கரையேற்றி விட்டவராவார். சித்திலும் அத்தியாசத்தோற்றம் உண்டா யென்பதற்குப் பிரமாணம் வருமாறு:—

"விப்ர ப்நத்வ் யாதிசித்தஸ்தம் நபகிஷ்டம் கதாசன
ஸ்வப்ந ப்ரமமதாத்யேஷு சர்ரைரேவா நுஜ்ஞாயதே"

"உலகம் உள்ளத்துள்ளது; அதனுண்மையினைச்சொப்பனத்தின் கண்ணும் மயக்கமான போதும் மதரோகத்தின் போதும் யாவரும் அறிகிறார்கள்."

யஜுர் வேதத்தில் கைவலியோப நிஷத்.

சாக்ஷியாயும் சின்மாத்திரமாயு மிருக்கிற சதாசிவன் நான்தான். என்னிடத்திலே சகலமுமுண்டாகின்றன; என்னிடத்திலேயே சகலமுமிருக்கின்றன; என்னிடத்திலேயே சகலமும் லயமடைகின்றன. அந்த அத்துவயமான பிர்ம்மம் நானே.

சூதசங்கிதை சமாதிவிதி யுரைத்த அத்தியாயம்.

அலேநுரை யாதிதோன்றி யாழியி னடங்கு மாபோ
விலைய மாகிடு முக்கண்ணு னிடத்தினிச் சகத்து. (கஎ)

மறைமுடியி னடநவிலு மாதேவ னொருவனே
யறைதரு நித்திய னுலக மவனது மாயா சொரூப
முறையு மிஃதவ னிடத்தே யுதிக்கு மொடுங் கிடும். (கக)

ஷை சிவலிங்க விசார முரைத்த அத்தியாயம்.

சிலபெரியோர்களுலங்கள் யாவுஞ் சிவத்திடையிலயமாதலினு
னலமருவி லிங்கமென்று பேர் வந்ததென நவில்வார்கள். (சு)

ஷை பிரமகீதை முண்டகோப நிடதார்த்த முரைத்த அத்தியாயம்.

எப்பொருள்களுக்குந் தோற்றமு நிலையு மிறுதியு மிதன் கண்ணேயாகி. (உ)

கூர்மபுராணம் ஈசுரகீதை.

நன்றாய் ஞானகனமாகி நானு மெல்லாம் பிறப்பிடமா
யொன்றாய்வேறோர் பொருளின்றி யொளியாயொன்றேடுவமிப்ப
தன்றாயகில சராசரங்கட் காதாரந் தானு மென்றும்
பொன்றாததுவாய் விகாரப்பொருளாய்ப் புலனாய்ப் புணர்ப்பரிதாய்(உ)
இரண்டாவதிலா தளவைகளா லெட்டாததுவா யெங்கெங்குஞ்
சிரங்கால் கைகண்முக முடைத்தாய்த் தெரியப்படாதாய்த் திரமாகி
யிரும்பார் நீர்தீகால் வானமெல்லா மிருத்தற் கிடமாகும்
பரந்தானுணர்ந்தோர் நிர்க்குணமாம் பரமவியோம மென்பர்களால். (ந)

ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலம்சம் 19 - ம் அத்தியாயம்.

எவனிடத்திலேசகலமும் பிரளயகாலத்திலொடுங்குமோ, எவன் சகல சரீரகனுயும் சகலாதாரமாயு மிருக்கிறானோ, அந்தச் சுவாமிக்குப் பலதரம் தெண்டன் சமர்ப்பிக்கிறேன்.

குறள்.

அகர முதல வெழுத் தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

இனிப் பின்னொரு சங்கை செய்கிறார். இவர் எவ்வளவு சங்கை செய்கின்றனரோ அவ்வளவுக்கும் இவர்க்கு வேதாந்தம் தெரியா

"தென்பதுவியக்கம். கோளரியார்கூற்று: "இனிமாயையில் அங்ஙனம்
"அத்தியாசமாய தோற்றத்தை ஜகஜீவ பரங்களாக மயங்கிக் காண்ப
"தொருவினைமுதல் ஆண்டு வேண்டப்படுமே! அது யாது? உண்மை
"யிற் பரப்பிரமமேயன்றி, வேறுபொருளில்லை யென்பது அவர் மதமா
"தலால், அங்ஙனம் மயங்கிக் காண்பதும் பரப்பிரமமே யென்று அவர்
"இறுத்தல்வேண்டும். அப்பெற்றித்தாவதாயின், சத்தாயதன்னை அங்
"ஙனம் அசத்தாய்க்காணுமது சிவப்பிரமமாமாறில்லை; ஜீவப்பிரம
"மேயாமென்க." என்பது. திருட்டாந்தங் கூறுவோர், எந்தக் குண
த்திற்காக எந்தத் திருட்டாந்த முரைக்கின்றார்களோ, அந்தத் திருட்
டாந்தத்தில் அந்தக் குணம் வரையில் ஒத்திருக்கிறதா? இல்லையா?
வென்று பார்த்துக்கொள்ள வேண்டும். அதை விட்டு வேறு வகை
யாய்ப் பேசுதல் தகுதியன்று. வாதி, ஒருகுணத்திற்கு ஒரு திருட்
டாந்தஞ் சொன்னால், பிரதி வாதி, மற்றொரு குணத்திற்கு அது
பொருந்த வில்லையே; ஆகையால் அந்தத்திருட்டாந்தம் குற்றமுள்ள
தெனச் சொல்லப்படுமோ? நீர் நிறைந்து கறுத்திருக்கும் மேகத்
தைப்போல் கூந்தலென்று கூறினால், கரிய நிறம் வரையில் திருட்டா
ந்தம் சரியாயிருக்கின்றதா, இல்லையா வென்று பார்த்துக்கொண்டு
போவதைவிட்டு, மேகத்தினிடத்தில் நீரிருக்கின்றதே; அவ்வாறு
கூந்தலினிடத்து நீரிருக்கின்றதா? இல்லையே; ஆதலால் கூந்தலுக்கு
மேகதிருட்டாந்தம் பொருந்தாது என்னலாமோ! கோளரியாரே!
இதை நீர் நன்கு யுய்த்துணரும். உய்த்துணர்ந்தா லிப்படிப்பட்ட
தகுதியில்லா வாக்கியங்களை எழுதமாட்டீர். கயிற்றரவு திருட்டாந்
தம் யாதுக்குச் சொன்ன தென்னில் ஒரு பொருளின்கண் இன்னொரு
பொருள் அத்தியாசமாய்த் தோற்றும் என்பது மட்டிலாம், சிவனை
ஒரு சத்துப் பொருளின்கண் சேதனாசேதன வுலகம் அத்தியாசமா
ய்த் தோன்றுகின்ற தென்பதற்குக் கயிற்றரவு திருட்டாந்தம் சொல்
லப்படுகின்றது. வாலுந் தலையுமுள்ள அத்தியாச அரவு, கயிற்றின்
கண் எப்படித் தோற்றுகின்றதோ, அப்படியே சேதனாசேதன வுலகு
சிவனிடத்துத் தோற்றுகின்றது. இந்தத் திருட்டாந்தம் சரியானது
தான். இதில் யாதுந்தோஷமில்லை. ஆனால் அப்படிக்காண்பதற்கு
ஒருவினைமுதல் வேண்டுமென்று அவர் கேட்கின்றாரே. அது கேள்
விதான். அந்தக் கேள்விக்கு வேதாந்திகள் சமாதானஞ் சொல்லவே
ண்டியதே. ஆனாலிது ஒரு தனியான கேள்வி. இதற்குஞ் சமாதா
னஞ் சொல்லுகின்றோம். சொப்பன வுலகில் சேதனம் அசேதன
மாகிய இருபொருள்க ளிருக்கின்றன. சேதனம், அசேதனத்தைக்
காண்கின்றது. இந்தச் சேதனா சேதன வுலகு ஒருமனத்தி லிருந்து
தோன்றுகின்றது. அம்மனத்தில் அச்சொப்பன வுலகு அத்தியாச
மாகும். மனத்தின்கண்ணே சேதனா சேதன வுலகு அத்தியாச
மென்று சொன்னால் அதற்கொரு வினைமுதல் வேறே வேண்டுமோ
சொப்பனத்தினோர் பாகமான அசேதன வுலகை அவ்விடத்திலேயே

மெய்யென்று காண்கிற சேதனம் அவ்வுலகி லடங்காதோ? அதற்
கொரு வினைமுதல் வேண்டுமென்றுகேட்பது என்னவிந்தை! சேதன
மும் அசேதனமுஞ் சேர்ந்துதானே சொப்பன வுலகாகின்றது. அது
போல இப்போது அதாவது சாக்கிராவத்தையில் அசேதனமும், அ
சேதனத்தைக் காணுஞ் சேதனமுஞ் சேர்ந்தே சாக்கிரவுலகானதால்,
எப்படிச் சொப்பன சேதனா சேதன வுலகு மனத்தின்கண் அத்தியா
சமோ, அப்படியே பிரமமான சிவத்தினிடத்தில் இச்சாக்கிர (வினை
முதலாயிருக்கும்) சேதனமும், அசேதனமுமான வுலகு அத்தியாச
மாம். ஒரு உண்மைப் பொருளின்கண் மற்றொரு உண்மைப்போலிப்
பொருள் அத்தியாசமாய்த் தோன்றுமென்பது யாவருமறிந்த விஷ
யம். அப்படியே உண்மைப்பொருளான சிவனிடத்தில் சேதனா
சேதன சாக்கிரவுலகப் போலிப்பொருள் அத்தியாசமாய்த் தோற்று
கின்றது. அரவினது தலைக்குச் சேதனமும் வாலுக்கு அசேதனமு
மாக்கி, கயிறு ஸ்தானத்தில் சிவனையும், அரவு ஸ்தானத்தில் சேதனா
சேதன வுலகையும் வைத்து, அத்துவிதிகள் அத்தியாசஞ் சொல்லு
கின்றார்களென்று கோளரியா ரறிந்திருந்தால் இப்படிப்பட்ட ஆக்ஷே
பஞ்செய்யப் பகிரங்கமாய் ஒருபோதும் வெளிவாரார்.

கோளரி, மாயையில் ஜகஜீவபரங்கள் காண்பதாகச் சொல்லுகி
றார், மாயை யொருபொருளல்ல; அது ஓர்வித சத்தி. அந்தச் சத்தி
யையுடைய பொருள் சிவன். சிவனிடத்தில் அச்சத்தியிருக்கின்றது.
கயிற்றின்கண் அரவு தோன்றுதற் கேதுவான சத்தியிருப்பதுபோல்
சேதனாசேதனவுலகம் தோன்றுவதற்கு ஏதுவான சத்தி சிவனிடத்தி
லிருக்கின்றது. அந்தச் சத்திதான் மாயை. காரியமுண்டாதற் கேது
வான சத்தி காரணத்திலிருப்பது யாவர்க்கும் அநுபவம். கடசத்தி
மண்ணின்கணிருப்பதுபோலாம். 'சத்தாகிய தன்னை அங்ஙனம் அசத்
தாய்க் காணுமது சிவப்பிரமமாமாறில்லை; ஜீவப்பிரமமேயாம்' என்று
சொல்லிய ஆபாசத்தையும் விளக்குவாம். சொப்பனத்தில் காணும்
உலகு அசத்து. அந்த அசத்துலகில் பல ஜீவகோடிகள் காணப்படு
கின்றார்கள். அவர்களில் ஒரு ஜீவன், அங்குள்ள பல அசேதனப்
பொருள்களைக் காண்பானாயின், காண்பானை சேதனமும் காணப்படு
பொருளான அசேதனமும் இரண்டும் அசத்துப்பொருளாதல்போலப்
பிரமத்தினின்றுந் தோன்றிய சேதனாசேதனப் பொருள்களுள் ஜீவன்
அசேதனப்பொருள்களைக் காண்கின்றான். பிரமம் காண்பதுமில்லை;
தான் அசத்தாய்ப் போவதுமில்லை; தான் எப்போதுஞ் சத்துத்தான்.
சத்து அசத்தாவதும் அசத்துச் சத்தாவதும் ஒருபோது மில்லை.

"அங்ஙனங் காண்பது வியாவ காரிகதசையி லாதலால், அது
"பற்றி அது பிரமமாகாதென்றல் அமையாதெனின், வியகாரம் பொ
"ய்யென்பது அவர் கொள்கையாதலால், பொய், மெய்யாய பரப்பிரம
"த்தை மறைத்து அங்ஙனம் வியகரிக்கச் செய்ய வல்லதாதல் யாங்ங

“ணம்?” என ஒரு கேள்விகேட்கிறார். பொய், மெய்ம்மையை மறைக்கு மென்பது இந்தக் கோளரியார்க்கு வெகு வியப்பாயிருக்கிறது! மெய்யை மெய் மறைக்குமென்றால் இவர்க்குக் குற்றமில்லைபோலும். இவர் மதத்தில் கடவுளும் மெய், மாயையும் மெய். கடவுளைத் தெரியவொட்டாதபடி மறைப்பது மாயை. இப்படியானால் கடவுளிருக்கிறவிடத்தில் மாயையில்லை; மாயையிருக்கிறவிடத்தில் கடவுளில்லையெனச்சொல்ல நேரிடும். அவ்வாறாயின் கடவுளும் மாயையும் அபரிபூரணமாகும். பெட்டிக்குளிருக்கும்பொருள் நமது கண்ணுக்குத் தெரியவில்லையென்றால் பெட்டியும் பொருளும் வேறு வேறு ஸ்தானத்திவிருக்கும் வேறு வேறு பின்னப்பொருள்கள். அப்படியே கடவுளும் மாயையும் வேறு வேறிருக்கும் பின்னப்பொருள்களாம். வேதாகம புராண இதிகாசங்கள் கூறியவாறு கடவுளுக்கும் பூரணஞ் சொல்லவேண்டும்; மாயைக்கும் பூரணஞ் சொல்லவேண்டும். மாயை யொருவிதத்தில் பொய்யாயு மிருக்கவேண்டும். (மாயையுண்மையில் அநிருவசனீயம்) இந்த மாயை கடவுளை மறைத்ததாகவும் ஆகவேண்டும். இப்படிச் சொல்வதில் சுருதி யுக்தி அநுபவங்களுக்கு விரோதமு மிருக்கப்படாது. அப்படியே நாம் சொல்லுகிறோம். மெய்யாய கயிற்றைப் பொய்யாய பாம்பு மறைக்கவில்லையா? மெய்யாய கிளிஞ்சலைப் பொய்யாய வெள்ளி மறைக்கவில்லையா? மெய்யாய கட்டையைப் பொய்யாய கள்ளன் மறைக்கவில்லையா? கோளரிக்கு இவ்வளவு தெரியாதா? ஓர் பிரபு “கோவிலில் வாகனமொன்றிருக்கிறது; அது என்ன வாகனமென்று பார்த்துவா” என ஒரு தச்சனை அனுப்பினானென வைத்துக்கொள்வோம். அந்தத் தச்சன் அப்படியே போய்ப் பார்த்து, “அது யானை வாகனம்” என்றறிந்து வந்து சொன்னான். பின்னர்ப் பிரபு, “அது என்ன மரத்தால் செய்யப்பட்டது?” என்று கேட்டார். தச்சன் “இன்ன மரமென்று நான் பார்க்கவில்லையே யென்றான். பார்க்காமல் போக, யானைக்கும் மரத்துக்கும் எத்தனைகாததூரமிருக்கிறது? மரமே யானைதானே. யானை வாகனத்தை யாராயின் மரத்தையன்றிப் பொருளுளதோ? மரம் யானையாய்த் தோற்றும்படி மரத்தில் சிற் சில பாகம் எடுத்துவிட்டார்கள். அதுவேயன்றி யானையென்னுஞ் சொல்லுக்குப் பொருளின்றே. யானையென்னுஞ் சொல்லுக்குப் பொருளில்லாதிருந்தும், யானை பொய்யாயிருந்தும் மெய்யாய மரத்தை மறைக்கவில்லையா?

மெய்யைப் பொய் மறைக்குமென்பதற்குப் பிரமாணங்கள் :—

**சூதசங்கிதை காலவளவையுரைத்த அத்தியாயம்.**

நீளவான்மாவினுண்மையை மறைத்து நிற்றலினாற்றமமென்றும்
வாளவிர் வித்தையென்னு ஞானத்தை மறைத்தலினவித்தையேயென்றும்
கோளுறஞ்ஞான காரணமாகிக்குலவலின் மோகமேயென்று
மாளுறுசத்து விலக்ஷணமாகி யமைதலினாலசத்தென்றும். (க0)

உலகுதித்திடற்குக் காரணமாகி யுளைதலிற் காரணமென்றும்
இலகுகாரியமாகிய வுலகாகி யிருக்கவும் தெரிதரப்படாத
வலனுறுதலினவ்வியத்தமே யென்றும் வகுப்பரம்மாயைக்குப் பெயர்க
ணிலவணிபெருமான்றன் வலியாற் கற்பித்தஇங் கிரம்பியகாலம். (கக)

## வேதாந்த சூடாமணி.

சீவசேதன மறைத்துத்தமமயலாகிய வுலகத்திறத்திற்கெல்லா
மேவுகாரணமாகிமாயை விபரிதஞானம் விளைத்துமோக
மோவவுணர்வழித்த வித்தைசத்தின் வேறாகிப் பொய்யுருவி யாகும். (கூ0)

## திருமந்திரம் பராவந்தை.

மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதற்பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே (உஉ)

"அநிருவசன விஷயத்துக்குக் கயிறு பாம்பாகக்காணப்படுதலைத்
"திருட்டாந்தமாக அவர் கூறுகின்றார். இனிக் கயிற்றிற் காணப்படும்
"அரவு மாத்திரையே அசத்தியமாவதன்றி யுள்பொருளாய்த் தோ
"ன்றுவனவாகிய கயிறு பாம்பு அநிருவசனமாகாமையின், அஃதாண்
"டைக்கு எடுத்துக்காட்டாதல் செல்லாது" என்று கூறுகின்றார்.
சிவம்உண்மை; உலகு பொய்யென்று சொல்லும் அவசரத்தில் கயிற்
றரவு திருட்டாந்தம் சொல்லப்படுகின்றதேயன்றி அநிருவசனீயமெ
னக் கூறும் அவசரத்திலன்று. கயிற்றில் அரவு உண்மையாய்த் தோ
ன்றுகின்றமையின் அவ்வுண்மைக்கு உள்பொருளாகிய கயிறு பாம்பு
எடுத்துக்காட்டாதல் அவசியமாயிற்று. அரவு இல்லையெனத் தெளி
ந்தபின் அரவு அசத்தாய்ப்போனமையால் அக்காலத்து உள்பொரு
ளான அரவை எடுத்துக்காட்டல் இல்லையாம். உள்பொருளாய்த்
தோற்றும்வரை உள்பொருளை யெடுத்துக்காட்டுதலும், இல்பொரு
ளாய்ப் போயபின் உள்பொருளை யெடுத்துக் காட்டாதிருத்தலும்
நியாயமே. இந்திரசாலக்காரனிடத்தில் தோன்றும் பொருள்கள் உண்
மையாய்க் காணுங்கால் அவைகளை யுண்மைப்பொருளாகக் கொண்டு
அப்பொருள்களில் இது இன்னபொருள், இது இன்னபொருள் என
வுண்மைப் பொருள்களையே யெடுத்துச் சொல்லுகின்றனர். அது
பொய்யென்றறிந்தபின் உண்மைப் பொருள்களை யெடுத்துக்காட்
டல் ஆவசியகமில்லாமற் போகிறது. உண்மையாய்த் தோற்றிய பொ
ருள் இல்லையெனத்தெளிந்த பின்னர் உண்மைப்பொருளை யெடுத்
துக் காட்டின் குற்றமாகும். அங்ஙனங் காட்டுகின்றன ரில்லையே.
இன்னு மிதுவிஷயமாக விரித்து அவருடைய அபிப்பிராயத்தை விள
க்கினால் அதன்பேரில் நாமும் விரித்துக் கூறி யெமதபிப்பிராயத்தை
விளக்குவாம்.

இதற்குமேல் ஒரு விநோதமான கேள்விகேட்டு உண்மையா
கவே வேதாந்த மதத்தில் இது ஒருபெரிய ஆக்ஷேபம்போல் நினைத்து,

இதற்கு வேதாந்திகள் சமாதானம் சொல்லமாட்டார்களென்றே
மகிழ்கின்றார். அவரது விநோத ஆக்ஷேபமாவது: "கயிற்று
"அரவிற்குங் கோணி நீண்டு கிடத்தல் முதலிய இலக்கண
"புமையால், ஆண்டு ஒன்றையொன்றாகத் திரியக்காண்டல் பெ
"தும். அதுபோல, சித்தாகிய பிரமத்தை ஜகஜீவபரங்களாக
"ஙனந் திரியக் காண்டற்குத் தம்முள் ஒப்புமை யின்மையின்,
"னையும் அவ்வாறு திரிபுகாட்சியென்றல் பொருந்தாமை யறிக"
இவர், கயிறும் பாம்பும் கோணிநீண்டு இருத்தலால் ஒப்புமை பெ
ருக்கிறதெனவும், அங்ஙனம் பிரமத்துக்கும் ஜகஜீவபரத்துக்கும்
புமையின்மையால் திரிபுக்காட்சி சொல்லப்படா தெனவுங் கூறு
றார். வேதாந்தம்படித்துக் கேள்விகேட்டல் செய்யாதவர்கள்
ஒரு பெரிய ஆக்ஷேபம்போல் தான் எண்ணுவார்கள். சமாதா
சொல்லிவிட்டால் விசாரணையற்ற கேள்வியென வெண்ணுவார்
வேதாந்திகள் கயிற்றரவு திருட்டாந்தம் சொல்வது ஒருசத்துப்பெ
ளின்கண் இன்னொரு சத்துப் போலிப்பொருள் தோற்றும் என்
மட்டுமேயாம்; முற்றுமன்று. நீலோற்பலம்போல் கண்ணெனில்
நிறம்வரையில் உவமானமேயன்றி. மற்றப்படியன்றே. நீலோற்ப
துக்கு வாசனையும் காம்பும் இருக்கின்றனவே; அவை கண்ணுக்கி
கின்றனவாவென்றும், நீலோற்பலம் தரிக்கப்படுகின்றதே, கண்
வாறு தரிக்கப்படுகின்றதா வென்றும் கேட்பது கற்றார்க் கழகன்
வேதாந்திகள் கயிற்றரவு திருட்டாந்தம் எந்த விசேஷத்திற்கா
சொன்னார்களென அவர்களை விசாரித்தல்வேண்டும். தாமே
திஷ்டம்போல் மனோசங்கற்பஞ் செய்துகொண்டு கற்றார் ச
முன்னர் ஆக்ஷேபிக்க வரப்படாது. தாமே மனோ சங்கற்பஞ் செ
கொண்டு ஆக்ஷேபிக்க வருவது, இடையில் செவிட்டுத் தன்
மையைப் பெற்ற வொருவன், அன்னியவூரிலுள்ள தனது சிநேகி
க்ஷேமத்தை விசாரிக்கப்போய், "நாம் இப்படிக் கேட்டால் அ
இப்படிச் சொல்வான், அதன்பேரில் இப்படி நாம் சொல்வோ
"இப்படி நாம்பேசினால் நாம் செவிடன் என்று அவன் தெரிந்துகொ
மாட்டா"னென முன்பே யோசித்துக்கொண்டு, ஒன்றிருக்க ெ
ன்றுபேசி, சிநேகிதன் சொல்லும் விசன சங்கதிகளுக்கெல்லாம்
தோஷம் சந்தோஷமென்றுகூறி அவமானப்பட்டு வந்த கதைபோ
கும். வேதாந்திகள் வந்தியா புத்திரனையுந் திருட்டாந்தமாகச் செ
லுகிறார்களே. அதை யெடுத்துக்கொண்டு, "வந்தியா புத்திரன்
நிருவசனீயமா?" என வொரு கேள்வி கேட்கலாமே. அநிருவசன
மென்பது இன்ன தன்மைத்தெனக் கணிக்கப்படாதது. வந்தியா
திரன் இன்ன தன்மைத்தெனக் கணிக்கப்படாதவனோ? வேதாந்
ளான அத்துவிதிகள் வந்தியாபுத்திரன், கயிற்றரவு, கானனீர், செ
பனவுலகு முதலிய பற்பல திருட்டாந்தங்கள் சொல்லுகின்றார்க
அப்படிச் சொல்வதில் ஒன்றுக்கொன்று வித்தியாசமிருக்கின்ற.

ஒருவித உவமேயத்துக்கு ஒன்றுக்கொன் றெவ்வாப் பலவித வுவமானங்கள் கூறுவதற்குக் காரணமென்னை ? இதைச் சற்றுக் கூர்ந்து ஆலோசிக்கப்படாதா ? அவசர முதவுமா ? "அவசரக்காரனுக்குப்புத்தி மட்டு" என்ற முதுமொழியைப் பொறுமையுடன் சற்று ஆழ்ந்தாலோசிக்கப் படாதா? வாயினால் ஆயிரஞ் சொல்லி விடலாம், கையினால் எழுதிடும்போது வெகுதூரம் யோசிக்க வேண்டுமே. வந்தியா புத்திரன் சுத்தமா யில்லவேயில்லை; வறுஞ் சொல்மாத்திரந்தான். கயிற்றரவு சொல்லோடு தோற்றமு முள்ளது. இது சோதனையில் கயிறெனத் தெளிந்தவுடன் அரவு காணுமற்போவது. கானனீர் சொல்லோடு தோற்றல் மாத்திரமு மாயினும் கயிற்றையன்றி யரவு இல்லையெனத் தெளிந்தபின் அரவுகாணுமற்போவது போலன்று; கானலையன்றி நீர் இன்றெனத் தெளியினும் பின்னும் நீருள்ளதுபோற் றோன்றுவது. (நீரில் தலைகீழாய்த் தோன்றும்நமது வடிவமும் அங்ஙனமேயாம்.) சொப்பனப்பொருள் சொல்லும் தோற்றமுமாயிருப்பதோடு, அநுபவப் பொருளுமாயு மிருப்பது. இவ்வாறு ஒன்றுக்கொன் றெவ்வாப் பல வுவமானங்கள் ஒரு வுவமேயத்துக்குச் சொல்லப்படுகின்றன. எந்த வுவமானம் எந்த விசேஷத்திற்காக எந்தச் சமயத்தில் எதுவரையில் சொல்லுகிறார்கள் அத்துவிதிகளென்றறியாது, எல்லாம் ஒன்றாய்ப் பாகுபாடின்றிக் கலந்து பேசுதல் பிறர்க்கழகேனும் பரசமய கோளரியெனப் பட்டம் பெற்றுப் பலரறிய அவைக்கண் வந்துநின்று பேசுவோர்க் கழகன்றே. கயிற்றரவு திருட்டாந்தம் கோணி நீண்ட வொப்புமையைப் பற்றிச் சொல்லவில்லை. ஒரு வஸ்துவில் இன்னொரு வஸ்து தோற்று மென்பதற்கே சொல்லப்படுகின்றது. இவர், திரியக்காணுங் காட்சிக்கு ஒப்புமை அவசியமென்பாராயின் மற்ற விடங்களில் கோளரியார் சொற்குற்றப்பட்டுக் கோளரிப்பட்டத்தை யிழந்து கொசுகுப்பட்டம் பெறுவார். எங்ஙனமெனின் காட்டுதும். கானலினிடத்து நீர் திரிபுக்காட்சி. நீர் அசைதலுற்று நாம் போகப்போக அதுவும் போகின்றது. அசைதலுற்றுப் போகும் நீருக்கும் கானலுக்கும் ஒப்புமையுள்ளதா ? இந்திர சாலத்தாலுண்டாம் பொருள்களுக்கும் அதன் காரணமான சத்தி அல்லது சத்தியுடைய பொருளுக்கும் ஒப்புமை சொல்லட்டும் பார்ப்போம். சொப்பன வுலகிற்கும் மனத்திற்கும் ஒப்புமை சொல்ல இவரால் ஆகுமா ? ஒப்புமையில்லாமை யினால் திரிபுக்காட்சி யன்றெனக் கூறப்படாதோ ? அனேக விஷயங்களில் காரணத்திற் றோன்றாதது காரியத்திலிருக்கக் காண்கின்றோம். காரணமான சுக்கில சோணிதங்களிலே காணாத தலை, கை, கால் முதலிய வுறுப்புக ளெல்லாம் காரியமான மனிதவுடலில் காணப் படுகின்றன. இதில் காரணத்திற்கும், காரியத்திற்கும் ஒப்புமையில்லையே; இதற்குப்பதில் கூறக் கோளரிக்கு வாயிருந்தால் திறக்கட்டும்; கையிருந்தால் எழுதட்டும்

பார்ப்போம் ! காரியங்களெல்லாம் சத்திரூபமாய்க் காரணத்திலட
யிருக்கின்றன வென்பாராயின், அது நமக்கு மிகச்சந்தோஷம்.
க்ஷத்திலுள்ள பூ, பிஞ்சு, காய், கனி, இலை, கொடி முதலிய வுறு
ளெல்லாம் வித்தில் சத்திரூபமாய் அடங்கி யிருக்கின்றன. இதற்
திருட்டாந்தம் யாதென்னின் வித்தை வறுத்துவிட்டால் சத்தி
விடுகின்றது. பின்பு காரியமான வுறுப்புகளோடுங்கூடிய விருக்ஷ
டாவதில்லை. இதில் வித்து ஒன்று, சத்தி யொன்று, விருக்ஷம் ஒ
ஆகமூன்றும். இது போலச் சிவன் ஒன்று, மாயாசத்தி யொ
ஜகஜீவபரங்களான வுலகு ஒன்று ஆகமூன்றும். வித்தினின்றும்
க்ஷம் எப்படி யுண்டாகின்றதோ, அப்படியே சிவனிடத்தினின்
ஜகஜீவபரவுலகுண்டாகின்றது. வித்திற்கும் விருக்ஷத்திற்கும்
மை யெப்படி அநாவசியகமோ அப்படிப் போலவும், இந்திரசால
ரனுக்கும் இந்திரசாலப் பொருளுக்கும் ஒப்புமை யெப்படி அநா
யகமோ அப்படிப் போலவும், மனத்திற்கும் சொப்பன வுலகுக்
ஒப்புமை யெப்படி அநாவசியகமோ அப்படிப்போலவும் சிவனுக்
வுலகிற்கும் ஒப்புமை அநாவசியக மென்று கோளரி அறியக்கட
வித்திலுள்ள விருக்ஷசத்தியும், இந்திரசாலக்காரனிடத்திலுள்ள
ரசால சத்தியும், மனத்திலுள்ள சொப்பனவுலகசத்தியும் எவ்வ
முறையே விருக்ஷத்தையும் இந்திரசாலப் பொருளையும் சொப்
வுலகையும் வெளியில் தெரியவொட்டாமல் அடக்கிவைத்திருக்கி
னவோ, அவ்வாறு பிரமமான சிவனிடத்துள்ள மாயாசத்தியா
சேதனுசேதன வுலகைத் தெரியவொட்டாமல் அடக்கி வைத்தி
கின்றது. காரியப் பொருள்களை யெல்லாம் காரணப் பொருள்க
டத்துள்ள சத்தியானது அடக்கிவைத்திருக்கின்ற தென்பதற்கு
கிலுள்ள எந்தப்பொருளும் சாக்ஷி பகரும்.

"மாயை அநிருவசன மென்பது ஒரு சமயத்தார்க்கும் கொ
கையன்று" என ஒரு புதுமை கூறினர். உலகில் பற்பல ச
ங்களுள்ளன. அந்தச்சமயங்கள் ஒன்றுக்கொன்று ஒத்துப்போ
விஷயமுமுண்டு; ஒவ்வா விஷயமுமுண்டு. ஒவ்வா விஷயத்தில்
பேதப்படுகின்றன. அந்தப்பேதந்தான் அந்தந்தச் சமயங்களுக்
சிறப்பாம். அந்தச் சிறப்பான விஷயம் மற்றச் சமயங்களுக்கு வி
தமாகத்தானிருக்கும். எது விரோதமோ அது மற்றச் சமயங்
டைய கொள்கை யல்லாமல்தான்போகும். திருட்டாந்தமாகச்
வனும் வைணவனும் ஜன்மாந்தரத்தை யொப்புக் கொள்ளுகின்ற
கள். அதுவரையில் ஒத்துப்போனார்கள். சிவனைக்கடவுளாக வை
வனும், விஷ்ணுவைக் கடவுளாகச் சைவனும் ஒப்புக்கொள்வதி
இது அம்மதஸ்தர்களுக்குச் சிறப்பாயிருக்கிறது. சிவன் கடவு
பது சிவசமயத்தார்க்கன்றி மற்ற ஒரு சமயத்தாருக்குங் கொள்
யன்று. அதனால் சிவசமயிகள் சிவனைக்கடவுளென்று சொல்லப்ப
தோ ? விஷ்ணு கடவுளென்பது விஷ்ணு சமயத்தார்க்கன்றி

ரு சமயத்தார்க்குங் கொள்கையன்று. அதனால் விஷ்ணு சமயிகள்
ிஷ்ணுவைக் கடவுளென்று சொல்லப்படாதோ? வேதம் பிரமாண
மன்பது ஒரு சமயத்தார்க்குங் கொள்கையன்று. அதனால் ஆரியர்
ள் வேதம் பிரமாணமென்று சொல்லப்படாதோ? இவ்வாறு மற்றச்
மயத்தார்க்குக் கொள்கையல்லாமற் போவதுகாரணமாக, ஒரு சம
த்தார், தம் சித்தாந்தத்தைச் சொல்லப்படா தென்றால் உலகில்
ந்தச் சமயத்தாரும் தம் சித்தாந்தத்தைச் சொல்லப்படாமற்போ
ர். போகவே, இந்தப் பரசமய கோளரியின் சித்தாந்தமும் அவற்றி
லொன்றாகாமற் போமோ? இவர், தமக்குப் பரசமய கோளரியென
பெயர் சூட்டிக்கொண்டமையாலே மற்றச் சமயங்களை யெல்லாம்
ண்டித்தவ ராகின்றார். ஆகவே, இவர் கொள்கை மற்றப் பரசமயத்
தார்க்கும், மற்றப்பரசமயத்தார் கொள்கை இவர்க்கும் சரிப்படா.
ரிப்படாமை காரணமாக இவர் சமயத்தை யிவர் பிரசங்கிக்க மாட்
டாரோ? மற்றச் சமயத்தார் தம் சமயத்தை யெடுத்துச் சொல்ல
மாட்டார்களோ? ஆதலால் பிறர் கொள்கை, கொள்கையல்லாமை
இவைகளைப் பார்க்கப்படாது. அப்படிப்பட்ட வழக்கம் உலகிலெந்
தச் சமயத்தார்க்குள்ளுமில்லை; இருக்கவும்படாது. இந்தப் பரசமய
கோளரியினிடத்தும் இவர் சமயத்தாரிடத்துமே யில்லை. ஆதலால்
இந்தக் கோளரி, பிறர்மேல் இது விஷயமாகத் தோஷங் கூறப்புகுந்
தது அறியாமையே யாம்!

"அவ்விவர்த்தன வாதிகள் ஒன்று பிறிதொன்றுபோலத் தோ
ன்றுதல் விவர்த்தன மென்பர். அஃது அசத்தியமேயாம். பிரபஞ்
சம் சத்திய மென்பது காட்சி முதலிய எல்லா அளவைகளாலும்
"துணியப்படுதலின், அத்தன்மைத்தாகிய பிரபஞ்சம் சித்தினுடைய
"விவர்த்தன மாதல் யாண்டைய தென்க?" என்றார். வேதாந்திகள்
பிரபஞ்சத்தை விவர்த்தமென்று சொல்வது உண்மைதான்; பிரபஞ்
சத்தை அசத்தியமென்பது முண்மை தான். இவர், சத்தியமென்றும்
அதற்குக் காரணம் பிரத்தியக்ஷக் காட்சியென்றும் சொல்லுகிறார்.
பிரத்தியக்ஷக் காட்சியினால் உலகு சத்தியமென்று சொல்வதில் அ
னேக தோஷங்களிருக்கின்றன. அதை யெடுத்துச்சொல்லி மறுப்
பாம். பிரத்தியக்ஷம் யதார்த்த மென்றும் சந்தேகமென்றும் விபரீத
மென்றும் மூன்றுவகைப்படும். இம்மூன்றில் உலகுள தென்பது ய
தார்த்தமா? சந்தேகமா? விபரீதமா? கயிற்றை யரவாகப் பார்ப்ப
து விபரீதம்; கயிறோ அரவோ வென்பது சந்தேகம்; கயிறு என்பது
யதார்த்தம். இவர் யதார்த்தப் பிரத்தியக்ஷத்தையே அங்கீகரிப்பா
ரென்று நம்புகின்றோம். இவர், உலகைக் காரியமென்றும் மாயை
யைக் காரணமென்றும் ஒப்புக்கொள்ளும் வருக்கத்திற் சேர்ந்தவர்.
இது விஷயமாகச் சில கேள்வி இவரைக்கேட்போம். மாயையானது
பொருளா? குணமா? தொழிலா? பொருளென்னில் அது எங்கிருக்
கிறது? சிவன் பூரணனாகலின் மாயையென்கிற பொருளிருக்க இட

மில்லாமற்போகும். குணம் அல்லது தொழி லென்னின் எதனது குணம் அல்லது தொழில்? சிவனது குணம் அல்லது தொழிலென்று பேசாவிடில் தப்ப வேறுவழி அவருக்கில்லை. (சிவனுக்குக் குணம் அல்லது தொழில் சொல்வதில் அனேக குற்றங்கணிகழும்.) மாயையைச் சிவனுக்குக் குணம் அல்லதுதொழிலாகக் கூறின் உலகிற்கு மாயையை முதற்காரணமென்றுகூறுதல் பொருந்தாது; குணம்அல்லது தொழில் முதற்காரண மாகாதாகலினென்க. குணம் அல்லது தொழிலான மாயை முதற்காரண மாகாதாகவே அதையுடைய சிவன்முதற்காரணமாதல்வேண்டும். சிவன் முதற்காரணமாகவே உலகம் அதன் காரியமாகச் சொல்லவேண்டும். காரணமும் காரியமும் பின்னமா? அபின்னமா? காரியத்துக்கு மூன்றுகாரணங்களுள்ளன. ஒன்று அபின்னம், இரண்டு பின்னம். குடத்திற்கு முதற்காரணமான மண் அபின்னம், தண்ட சக்கரங்களான துணைக்காரணமும், குலாலனை நிமித்தகாரணமும் பின்னம். அவ்வாறு உலகிற்குச் சிவனை முதற்காரணமாகச் சொல்லி அபேதப்படுத்தலாமா? துணைக்காரண மாகவாவது நிமித்தகாரணமாகவாவது சொல்லிப் பேதப்படுத்தலாமா? துணைக்காரணமாகவாவது நிமித்த காரணமாகவாவது சொல்லிப் பேதப்படுத்தலா மென்னின் அப்போது சிவனுக்கு அபரிபூரண தோஷமுண்டாகும். முதற்காரணஞ் சொல்லி அபேதஞ் சாதித்தால் அபரிபூரணதோஷம் வாராதெனினும் கோளரியின் சித்தாந்தப் பிரகாரம் இதிலுந் தோஷ மில்லாமற் போகவில்லை. கோளரியின் சித்தாந்தம் யாதெனின், உலகிற்கு மாயை முதற்காரணம், சிவன் நிமித்த காரணம், சிவனது சிற்சத்தி துணைக்காரணமாம். இதன்மறுப்பு வருமாறு: மாயைக்கு மண்ணையும் சிவனுக்குக் குலாலனையும் திருட்டாந்தமாகக் கூறுவதில் மண்ணும் குலாலனும் வேறுவேறு பொருள்கள். அதாவது பேதப் பொருள்கள். இவ்வாறு மாயையும் சிவனும் வேறுவேறான பின்னப் பொருள்களாக வேண்டும். பின்னப் பொருளாமேல் சிவனுக்கு அபரிபூரண தோஷமுண்டாமென முன்னரே யெடுத்து விளக்கினோம். சிவனை நிமித்த காரணமாகவும் சிற்சத்தியைத் துணைக்காரண மாகவுஞ் சொல்வதில் மாத்திரங் குற்றமில்லையோவென்னின் அதிலுமுண்டு. உவமானத்தில் நிமித்தகாரணனான குலாலனும் துணைக்காரணமான தண்ட சக்கரங்களும் பேதப்பொருள்கள். அவ்வாறு நிமித்தகாரணரான சிவனும் துணைக்காரணமான சிற்சத்தியும் பேதப்பொருள்களாகவேண்டும். இதில்சிவனுக்கும் சிவனது குணமான சிற்சத்திக்கும் பேதஞ்சொல்வது ஒரு குற்றம்; சிற்சத்தியைத் தண்ட சக்கரங்களைப்போல் பொருளாய்க் கொள்வது ஒரு குற்றம். குலாலன் தானில்லாத இடத்திலிருக்கும் மண்ணையெடுத்து, தானில்லாத இடத்திலிருக்கும் தண்ட சக்கரங்களைக்கொண்டு தானில்லா இடத்தில் குடத்தை வனைகின்றான். அங்ஙனமே, சிவனும் தானில்லாத இடத்திலிருந்து மண்போன்ற மாயையை யெடு

த்து, தானில்லாத இடத்திலிருந்து தண்டசக்கரங்களைப்போன்ற சிற்
சத்தியைக்கொண்டு, தானில்லா இடத்தில் உலகைச் சிருட்டிக்கவே
ண்டும். இது எவ்வளவு ஆபாசம்? சிவனை யுலகிற்கு அபின்னநிமித்
தோபாதான காரணமாகச்சொல்லி, உலகைக் கயிற்றரவு, கானனீர்,
கனவுலகுமுதலியவைகளைப்போல் சத்துப்போலியாகக் கூறினால் சிவ
னுக்கும்பரிபூரணத் தன்மைக்குக் குறைவில்லை; உலகும் ஒருவிதமாக
அதாவது சத்துப்போலியாக அல்லது அநிர்வசனீயமாக இருப்பதாய்
ஏற்படுகின்றது. இவ்வாறு சொல்லுங்கால் உலகத்தைச் சத்தியமென்
றெங்ஙனங்கூறலாம்? சிவனுக்குப்பரிபூரணத்துவமுஞ்சொல்லி, அதில்
உலகமுமிருக்கிறதாகக் கூறி, அத்துடனே உலகிற்குச் சத்தியத்துவ
முஞ்சொன்னால் எவ்வாறொவ்வும்? ஒவ்வா தென்பதே துணிவு. சத்
தியமென்று சொல்லக்கூடாதாகவே வேறு என்னசொல்லுகிறது? அ
சத்தியமென்று தானே சொல்லவேணடும். அப்படியிருக்கப் பரசமய
கோளரியார், உலகை அசத்தியமென்று சொல்வது தப்பென வரைய
எப்படி யிறகைக் கையில் எடுத்தார்? வேதாந்திகள், சத்தியமென்
பாரை மறுக்க அசத்தியமென்று சொல்லிடினும் உண்மையில் அவர்
கள் அசத்தியமென்று சொல்லுகின்றன ரில்லை; சதசத்விலக்ஷண
அநிர்வசனீயமென்றே சித்தாந்தப்படுத்தி யிருக்கின்றனர். இங்ஙன
மாக, அவர் அசத்தியமென்று கூறுவதாய் வைத்து, அவரை மறுக்கப்
புகுவது, கயிற்றைப் பாம்பாகவெண்ணி, அப்பாம்பைத் தடிகொண்
டடிக்கின்றமைக் கொப்பாம்.

கோளரியார், உலகத்தைச் சத்தியமென்கிறார் ; நாம் அசத்திய
மென்கின்றோம். கோளரியார் உலகைக் காரியமென்கிறவர்; நாமுமங்
ஙனந்தான். காரியமெல்லாம் அசத்தியமென்பதற்குப் பல திருட்டாந்
தங்கள் கூறினோம். இப்போதுங் கூறுகின்றோம். கடமானது சத்தி
யம்போற் றோன்றினும் சோதனையில் மண்ணைத்தவிரப் பொருளில்லை;
அங்ஙனமே நூலையன்றி யாடையில்லை. இது காட்சிப்பிரமாணம். இத
ற்கு அநுமானம் வேண்டுவதில்லை. இந்தப் பிரத்தியக்ஷத்தைக்கொண்
டே சிவனிடத்து உலகு அசத்தியமென்கின்றோம். குடம் சத்திய
மென்பது விபரீதப் பிரத்தியக்ஷம்; குடம் சத்தியமோ அசத்தியமோ
என்பது சந்தேகப் பிரத்தியக்ஷம்; குடம் பொருளல்ல; மண்ணே
பொருளென்பது யதார்த்தப்பிரத்தியக்ஷம். "உலகு யதார்த்தமாயிரு
ந்து அனுபவத்திற்கு வருகின்றது, ஆதலால் அதைப் பொய்யென்று
எங்ஙனமுரைப்பது" எனின் கூறுதும். யதார்த்தப் பிரத்தியக்ஷத்தி
லுந் தோஷமுண்டு. சூரியன் ஒரு சாணளவு வட்டமாயிருப்பது யதா
ர்த்தப் பிரத்தியட்சமானாலும் கருவிகளைக்கொண்டும் நூலைக்கொண்
டும் வேறு காரணங்களாலும் பார்க்கும்போது பூமியைவிட எத்தனை
யோ பல்லாயிரமடங்கு பெரிதென நிச்சயிக்கின்றோம். நூலறிவற்ற
சாதாரண ஜனங்கள் எது எது எப்படித் தோற்றுகின்றதோ, அதை
அதை அப்படிஅப்படியே உள்ளதென்கின்றனர். அதுவிவேகமாகாது.

உலகு யதார்த்தப்பிரத்தியட்சமாய்ச் சத்தியம்போல் தோன்றினும்
வேதமுதலிய கலைகளைக் கொண்டு ஆராயுமிடத்து அது அசத்தியமெ
ன்றே சொல்லத்தக்கதாம். அதுபற்றியே நமது தெய்வப் புலமைத்
திருவள்ளுவ நாயனாரும் பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்
தலை மருள் என்றும், "எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொரு
ள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்றும் திருவாய் மலர்ந்தருளினர்.
ஷை இரண்டுகுறளின் பொருளைப் பரிமேலழகரது உரையானுந் தெ
ளிக. உலகு சத்தியமென்பது சாதாரண ஜனங்களின் கூற்று; அசத்
தியமென்பது வேதசாஸ்திர ஆராய்ச்சி செய்த புலவர்கூற்று. உலகம்
சத்தியமென்று யார்க்கும் எவருங்கற்றுக்கொடுக்கவேண்டிய அவசிய
மில்லை; யாவர்க்குமே யியற்கையாயுள்ளது. உலகம் அசத்திய மென்
னும்ஞானம் கல்லிலிருந்து நாருரிப்பதுபோல்வது. இதையே வேத
சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. இப்படிப்பட்ட அருமையான விஷ
யங்களைத் தருக்கத்தினால் தாபிப்பதே வேதசாஸ்திரங்கட்குச் சிறப்
பு. இந்த அருத்தத்தையே சேனாப்போதாரும் கூறினர். பொருள
ல்லவற்றைப் பொருளென்றுணர்தலை மருளென்று கூறியதனால் பொ
ருளல்லவற்றைப் பொருளல்லவென் றுணர்தலும், பொருளைப் பொரு
ளாக வுணர்தலும் தெளிவென்றும், எந்தெந்தப் பொருள் எந்தெந்த
விதமாய்த் தோன்றினும் அந்தந்தப் பொருளில் மெய்ப்பொருள்யாது
யாது என்று ஆராய்ந்து அந்த மெய்ப்பொருளைக் காண்பது அறிவு
என்றதனால் தோன்றியது தோன்றியவாறுணர்தல் அறியாமை யென்
றும் ஆகின்றன. இதன்படியே கோளரியார் கூற்று மருளும் அறியா
மையுமாம். காரியமெல்லாம் அசத்தியமாவது பிரத்தியக்ஷப் பிரமா
ணத்துக் கியைந்திருக்கின்றமையால் இதைக்கொண்டு காரியமான
உலகும் அசத்தியமென அநுமானிக்கத் தகும். 'பிரபஞ்சம் சத்திய
மென்பது காட்சி முதலிய எல்லா அளவைகளாலும் துணியப் படுத
லின்' என்பதனால் வேதமுதலிய சத்பிரமாணங்களும் அங்ஙனம் கூறு
வதாய்ச் சிலரெண்ணக்கூடும். இது முழுப்பூசுணைக்காயைச் சோற்
றில் மறைப்பதற்கொப்பாம். வேத சாஸ்திரங்கள் உலகம் பொய்
யென்று எங்கும் தம்பட்டம் அடிக்கவும், ஞானவான்களெல்லாம்
பெருங்கூக்குரல் போடவும் இவரும் இவரைப்போன்றோருமான சிலர்
அவைகளுக்கு மாறாகச் சொன்னலாகுமா ! ஆகாது ! ஆகாது !! பிர
பஞ்சம் அசத்திய மென்பதற்கு வேதமுதலிய சத்பிரமாணங்கள் பல
வருமாறு:—

சாமவேதத்தில் மைத்திரேயோப நிஷத்
முதலத்தியாயம் சு-வதுவாக்கியம்.

ஜகத்தை யிந்திரசாலமாய்ப் பார்க்கிறவனையும்.

யசுர் வேதத்தில் சர்வ சாரோப நிஷத்.

மித்தை எது? இல்லாத பிரபஞ்சத்தை ப்ரம்மத்தில் ஆரோபிப்பது.

மாயை யென்பது யாது ?

அநாத்துமாவுக்கு மூலமான தெதுவோ அது தான் மாயை,.... அந்த மாயை யானவள் அநாதி. முடிவை யுடையவள்... ... இருக்கிறவளுமல்ல; இல்லாதவளுமல்ல; அவ்விரண்டுங் கலந்தவளு மல்ல. வாக்குக் கெட்டாதவள் (பிர்ம்மமாகிய) அதிஷ்டானத்திலேயே யில்லாதவள் ... ... எவள் வாஸ்தவத்திலில்லேயோ அவள்தான் மாயை. அவள் சுவரூபம் அக்ஞானம். அதே தான் மூலப்பிரகிருதி,........ ஜகதாகாரமாய்ப்பரிணமித்திருக்கிறவள்.

சுக்கில யசுர்வேதத்தில்

நிராலம்போபநிஷத்.

இரண்டாவதற்றதாயும் எங்கும் தொடர்ச்சியா யுள்ளதாயும் சகல சுவரூபமாயுமிருக்கிற பிரம்மத்தினிடத்திலே தேவ, மிருக, நர, ஸ்தாவர, ஸ்திரீ புருஷ, வருணுசிரம, பந்த, மோக்ஷஉபாதி (கற்பிதமானவேஷம் அல்லது கற்பிதமான தடை)யாக விருக்கிற பலதேக பேதங்களினுலே கயிற்றிற் பாம்பென்கிற பிரமைபோல் கற்பிதமா யிருக்கிற ஞானமே யஞ்ஞானம்.

பிர்ம்மம் சத்தியம்; ஜகத் பொய்.

ருக்வேதத்தில் ஆத்மபோதோபநிஷத்.

பழுதையில் பாம்புமுதலியனபோல் (பழுதையில் பாம்பு என்கிற பிரமைக்குக்காரணம் பழுதைபோல) பிரபஞ்சத்திற் காதாரரூபமாய்ப்பிர்ம்மசத்து மாத்திரமே சூழ்ந்துகொண்டிருக்கிறது; ஆகையால் ஜகத்தில்லை.

கயிற்றிற் பாம்பு முக்காலத்திலு மெப்படியில்லேயோ, அப்படி அகங்காராதி தேகம்வரையிலுள்ள ஜகத்தானது அத்துவயனுயிருக்கிற என்னிடத்தில்லை.

யசுர்வேதத்தில் வராகோபநிஷத்

உ-வது அத்தியாயம்.

ஜகத் முழுதும் சங்கற்ப (மனத்தோற்றம் அல்லது எண்ணம்) மாத்திரத்திஞலேயே உண்டாகின்றது. சங்கற்பமாத்திரத்திஞலேயே ஜகத்தோற்றம்.

சூதசங்கிதை முத்தி நிலையுரைத்த அத்தியாயம்.

திரிசியமாம் பவஞ்சந் தேய்ந்து சொப்பனம்போல் தோன்ற. (ருஉ)

ஷை மோசகப் பிரதனதியல்புரைத்த அத்தியாயம்.

உலகமுழுதஞ் சொப்பனம்போ லுறக்கண்டிடுவோனெவனும் (கசு)

பஞ்சாக்கர மந்திரமுரைத்த அத்தியாயம்.

பரசிவ சொரூபத்திற் கன்னியமாயுள்ள வெல்லாம் மித்தை யாவதிஞலேயே. (௯)

ஷை ஷை அத்தியாயம்.

அனகற்கன்னிய மாயவையெல்லாம் பொய்யாகிப்போதலாலே.(கஉ)

ஷை சிவலிங்க விசாரமுரைத்த அத்தியாயம்.

பரமசிவத்திட மாரோபிதமான பவஞ்சம். (கo)

ஷை வேதாவிரோத முரைத்த அத்தியாயம்.

துவித பிரபஞ்சம் காணப்படலானும் குறைபாப் பரத்தாரோபிதமாய்க் குலவலானுங் கற்பிதமே. (உ)

ஷை உணத்தகாப் பொருளுரைத்த அத்தியாயம்.

சொற்ற சத்தைக்கு அயல் யாவுஞ் சூனிய மாகையினுலும். (சத்தையென்பது சிவம்) (ஈ)

(இதற்குச்சரியாகச் சிவஞானபோதமும் "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலின்" என்று கூறுகின்றமை காண்க.)

ஷை பிரமகீதை முன்சொல்லிய வுபநிடதங்களின் அருத்தத்தைத் தொகுத்துரைத்த அத்தியாயம்.

இடையிலோர் மாயை யுண்டென்ன எண்ணுமேல், கடையதேயாகும் அவன் கற்றகல்வியே. (எ)

மாயை யென்ருென்றுண்டாக மதிப்பது மனனமல்ல. (அ)

உண்டுபோற்ருேன்று மூலகெலா மூண்மையன்றென வுணர்த்தி.(உக)

ஷை பிரமகீதை ஐதரேய வுபநிடதார்த்தத்தை யுரைக்கும் அத்தியாயம்.

சொல்லுருநின்ற கற்பிதப்பொருளிற் சொல்லளவுள்ளதாயுண்மைக் கில்லையாயிருக்குஞ்சிலபொருள்சொலவுமில்லையாஞ்சிலபொருளவைதா னெல்லை தீர்வானுதிகளுஞ் சுத்திகையிலிரசதாதிகளுமா முன்னைத் தொல்லையாம்பொருளும் கற்பிதத்துண்மைப்பொருளையும் சொல்லுமற் சுருதி.(கக)

இலிங்கபுராணம்

தியானவிதியுரைத்த அத்தியாயம்.

விரிந்தபூதங்களிஞேடு விளம்பிந்தியங்கள் தத்துவங்கள்
திருந்தா அகங்காரத்திஞெடு செறிமுக்குணங்கள் மாத்திரைகள்
பொருந்துமாயை சிவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி
யிருந்தெவ்விடத்து நிலைபெறுவோம்அதனுல்தாணுவென இசைப்பார். (ஈக)

கூர்மபுராணம் சாங்கியயோகமுரைத்த அத்தியாயம்.

ஆதலால் பிரமமொன்றே நித்தியம் அலகைத்தேரிற்
பேதுறத்தோன்றுநீரிற் பிரபஞ்ச மருண்டுதோன்றும். (உ௫)

திருவிளையாடற்புராணம் பரிநரியாக்கியபடலம்.

பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ் சித்தவோ. (ஙo)

பாகவதம்,

பொய்வகையாகு மாயைப் புணர்ப்பினூற் பட்டதன்றி.

---

உரைத்திடு கனவுபோல வுபாதிபொய்யாகுமென்றும்.

---

பொய்ம்மையா மூடற்பொருளினில்.

---

கானனீர்போல் வையக்மாதிய வழங்கிய வுலகமெல்லாம்.

காசிகாண்டம்.

கானலிடைத்தெண்ணீருங் கயிற்றினில் வாளரவும் அலைகடலிற்பட்ட
கூனமுதுசிப்பியிற்றோன்றும் வெள்ளியும் அம்முதலுண்மைக்குறிக்கிற்றீரும்
ஆனவைபோல் நினையறியிற்றோன்றும் சகமனைத்தும் நில்லாதழியுமாற்றால்
தேனவிழ்பூங் கடுக்கையணி செல்வநினதறை கழற்றூன் சென்னிசேர்ப்பாம்.

மகாஇதிகாசமாகிய சிவரகசியத்தில் 6-வது அமிசத்திலுள்ள

ரிபுகீதை

3-ம் அத்தியாயம்.

பரமசிவனருளியவா பின்னுஞ்சொல்வேன்
பலவிதமாம் பூதம்பொய் புவனம் பொய்யே. (க)

சோத்திரமு மஃதுணருஞ் சத்தம்பொய்யே
சுழல்தொக்கு மஃதுணரும் பரிசம்பொய்யே
நேத்திரமு மஃதுணரு முருவம்பொய்யே
நிகழ்நாக்கு மஃதுணரு மிரதம்பொய்யே
காத்திரமார் மூக்குமதன் விடயம்பொய்யே
கரணமு மவ்வதிட்டான தெய்வம்பொய்யே
கோத்திரமுஞ் சூத்திரமுங் குலமும்பொய்யே
குறைவற்ற பரப்பிரம மொன்றேமெய்யாம். (ரு)

7-வது அத்தியாயம்.

சுகதமுதற்பேதங்கள் மூன்றுமில்லை
சூக்கமகா பூதங்களைந்துமில்லை. (உகூ)

13-வது அத்தியாயம்.

வித்தரமாமாயையுமேயசத்தேயாகும்
விரிந்தஅதன் காரியமும் அசத்தேயாகும். (ரு)

சத்ததுவாய்த் தோற்றுவதும் அசத்தேயாகும்
சதசத்தாய்த் தோற்றுவதும் அசத்தேயாகும். (கூ)

29-வது அத்தியாயம்.

கானலிடைக் கற்பிதமாம் பேய்த்தேர்போலும்
கனவினிடைக் கற்பிதமா மூலகேபோலும்
ஞானகனமான பரப்பிரமத்தின்கண்
ஞாலமெல்லாங் கற்பிதமாய்த் தோற்றலாலே. (கரு)

30-வது அத்தியாயம்.

சன்மாத்ரமான பரப்பிரமமல்லாற்
சராசரமாய்ச்சனிக்கின்ற சகமேயில்லை. (௨௫)

31-வது அத்தியாயம்.

சத்தியமேசத்தியமே சகமேயில்லை. (௨)

---

கனவினிடைக்கண்ட பொருணனவின் கண்ணே
கலங்காமலிருந்திடுமேற் சகத்துஞ்சத்தாம்
நனிவிளைவிலோடியிடு நதியின்வேக
நலியாது நின்றிடுமேற் சகத்துஞ் சத்தாம்
செனனமுதற் குருடர்க்கு மணியினேர்மை
செவ்வியதாத் தெரிந்திடுமேற் சகத்துஞ் சத்தாம்
அணியமற விசாரிக்கிற் சகத்தேயில்லை
யகண்டவடிவானபர மொன்றேயுண்மை. (௧௫)

35-வது அத்தியாயம்.

சத்தியமாய்ச்சகத்து முதலிருக்குமாகில்
சலனமறச்சுழுத்தியிலு மிருக்கவேண்டும். (௨௪)

36-வது அத்தியாயம்.

அரவுமுதல் பலவிதமாய்த்தோற்றினு மதிட்டான விரச்சுவினையாய்ந்தறிந்
மருள்வடிவாமரவுமுதலனைத்துமந்தமாசற்றரச்சுவடிவாவதேபோல் [தால்
விரவுசகமுதலியவாய்த் தோற்றினும் விமலவதிட்டான பரப்பிரமந்தன்னை
யருமையுடனன்றாக வாய்ந்தறிந்தா லவையாவுமகண்டபரப்பிரமமாமே.(௨௭)

இராமாயணம் சுந்தரகாண்டம்.

அலங்கலிற்றோன்றும் பொய்ம்மையரவெனப் பூதமைந்தும்
விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதெவனைக்கண்டா லவரென்பர்கைவிலேந்தி
இலங்கையிற் பொருதாரன்றே மறைகளுக்கிறுதி யாவார். (௧)

பாரதம்.

ஐவகைப்பொருளும்நான்கு கரணமும் குணங்கள்மூன்றும்
செய்வினை யிரண்டுமொன்றி யாவருந் திகைப்பநின்ற
பொய்யிருளகலஞானப் பொருட்கதிர் விரித்தபுத்தேள்.

பாரதம் பகவற்கீதை பிரபஞ்ச அத்தியாயம்.

கனவுந்திகழ் கழுதாழியுமிகு கந்தர்வநகரும்
எனவந் தழிதலினு ளுருவது வின்றியதுயாது. (௯)

---

மந்திரமாய விந்தமரத்தினைத் துறவென்கின்ற
தந்திரவாளால்வெட்டித் தற்பர மாகிநின்றே
இந்திரசாலமென்ன யாவுமென்னிடையே காட்டும். (௧0)

பாரதம் உத்தரகீதை முதலத்தியாயம்.

பிரபஞ்சவஸ்து மித்தையானபடியினாலே. (௧௧)

ஆகாசாதிச்சகலபிரபஞ்சமும் கற்பிதமாகையாலே
சகலமும் அசத்தியமென்கிற அபிப்பிராயத்தினாலே. (௧௬)

**ஞானவாசிட்டம் கசன்கதை.**

பிரமமாஞ்சுத்தவேலை நுரைகளாம் பிறங்கலெல்லாம்
பரமவாதித்தன்முன்னர்க்கானலாம் பரவைஞாலந்
திரமதாமிதனைமுன்னே செப்பினன்வியாழன்றந்த
வரமகன்கசனும்பேரோன் மற்றதுவள்ளல் கேட்பாய்.

**சிவஞானபோதம்.**

உணருரு அசத்தெனின்.

**தேவிகாலோத்தரம்.**

நீடியதலைகாலெங்கு நிறைமயிர்த் தோலினாலே
மூடியவுடலுங்காணுங் கனவெனு முளத்தனாகி. (௪௧)

தோன்றுவ தெல்லாம் அசத்து. (௧௫)

சத்திபாதலந்தான் முதலீறதா
வைத்தவையமெலாம் அசத்தாதலால். (௨0)

**திருவாசகம்.**

மாயப்பிறப்பறுக்கும் மன்னனடிபோற்றி,
பொய்யாயினவெல்லாம் போயகலவந்தருளி,
இந்திரஞாலங் காட்டியவியல்பும்,
இந்திரஞாலம் போலவந்தருளி,
இருமுச்சமயத் தொருபேய்த்தேரினை,
பூத்தாரும்பொய்கைப் புனலிதுவேயெனக்கருதிப்
பேய்த்தேர்முகக்குறும் பேதைகுணமாகாமேதீர்த்தாய்,
மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி மதித்திடாவகை நல்கினான்,
இந்திரஞாலவிடர்ப்பிறவித்துய ரேகுவதாகாதே,
பொய்யாயசெல்வத்தே,
மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி மதித்திடா வகைநல்கினான்.

**திருநாவுக்கரசுசுவாமிகள்.**

பொய்ம்மாயப் பெருங்கடலில் புலம்பாநின்ற புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள், இம்மாயப்பெருங்கடலை.

---

பொய்யினால் மிடைந்தபோர்வை.

---

பொய்விராமேனிதன்னைப் பொருளெனக்காலம்போக்கி.

**திருமந்திரம் பராவத்தை.**

ஆயும்பொய்மாயை யகம்புறமாய் நிற்கும். (எ)

பொய்கண்ட மாமாயை. (௨௬)

**சிவஞானசித்தியார்.**

உலகமெலாம் அலகைத் தேராம்.

**பட்டினத்துப் பிள்ளை.**

மையாடு கண்ணியும் மைந்தரும் வாழ்வும் மனையுஞ்செந்தீ
யையாகின் மாயையுரு வெளித்தோற்றம் அகிலத்துள்ளே
மெய்யாயிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க் கனவாய்மெல்லப்போனதுவே.

---

மாயப்பேய்த்தேர்போன்று நீப்பரு முறக்கத்துக்
கனவே போன்றுநனவு பெயர்பெற்ற மாயவாழ்க்கையைமதித்து.

**கந்தரனுபூதி.**

இல்லையெனுமாயையிலிட்டனைநீ.

**பிரபுலிங்கலீலை விமலகதி.**

மெய்ம்மைசிவமே யல்லாமல் விரியுமுலகம் பொய்யென்பார்
இம்மைமறுமை நிலையல்லவென்ன நிகழ்ந்த கருத்தினர். (௧௧)

**வேதாந்தசூடாமணி.**

பொய்யாகிச்சத்துருவப் பொருளின்வேறாகி யொருபொருளாய்த்தோற்றல், செய்யாமையாலுளதில்சுதந்தரஞ்சான் றாயவொரு சேதனன்பா, லுய்யாத சீவாதியாக்குதலாற் சுதந்தரமு முளதுமாயை, மெய்யானதலதென்றல் விசும்பலர்போலில்லையென விளம்பலன்றே. (௬௨)

புலனில்கனவிடைக்கரி போற்றோன்றி விசாரந்தோன்றப்பொன்றும் பொய்யாம். (௬௩)

**விவேகசூடாமணி.**

சொன்ன இப்பஞ்சகோசம் சுத்தமா மித்தையென்றே.

**கைவல்லியம்.**

தானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்கனாவூர்
வானமைகயிற்றிற்பாம்புமலடிசேய்முயலின்கோடு
பீனமாந்தறிபுமானிற்பிரபஞ்சமெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்திடாதே.

**சிவானுபூதிவிளக்கம்.**

பார்த்தேன் உலகப்பரப்பெல்லாம் பார்த்தளவில்
பேய்த்தேர்போலில்லையாப் பேரறிவேகண்டனமே.

**திருவம்மானை.**

மெய்யானதொன்றுமே மெய்யான தம்மானை
மெய்யன்றி மற்றெல்லா மித்தைகாணம்மானை.

**சிவானந்தமாலை.**

எங்குஞ்சிவமொழிய இல்லையவன்தன்னை
அங்கந்திரள்கருவி ஆணவமாம்—பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய் பொய்பொய் பொய்பொய்பொய் பொய்.

**வைராக்கியசதகம்.**

அகனுமிவ்வுடல் மினின் விரைந்தெனின் விரைந்தாற் றொழிதலதிங்கே
சகலமுஞ்செய நினைகுதறனையினித்தடப் புனலிதுவென்றே
பகலினால் விரிகானலை நெஞ்சமே கருதி நெற்பயிராதி
இகலினாற் செயநினைபவர் நினைவையொத்திடு மெனவிடுவாயே.

### சிவாகமார்த்ததரிசனம்.

சட்டெனத் தெளிந்தான் சர்ப்பமிரச்சுவிற் காணுதாற்போற்
கட்டினபாசம் விட்டாற் கண்டிலன் பெத்தம்பின்பு
சிட்டநற் சுபாவமேயாஞ் சீவன் முத்தன்றேகத்தை
விட்டபின் பரமமுத்தன் வியோமம்போற் கடாகாசத்தில்

### சித்தாந்தசிகாமணி.

கயிற்றரவிப்பி வெள்ளிகுற்றியிற்கள்வன்மிக்க
வெயிற்படு கானற்றெண்ணீர் விண்ணிற் கந்தருவ வூர்போல்
இயற்படு நித்தசச்சிதாநந்த சிவத்தின்கண்ணே
செயப்படுபொருளாய்த் தோன்றுஞ் செப்பிய வுலகமன்றே

### விருத்தாம்பிகைதுதி.

பழுதையென்றுணரின தின்றுணர்த்தோன்றும்பாம்புமப்பழுதையானது போல், முழுதுணர்ந்தறிவாந் தன்னையேகாணின் முரணுறு சராசரமெவையு, மெழுதருமறிவாய் விளங்குமென் றிசைத்தென் னெழுபவந்துடைத்தெனை யளித்தாள், கெழுமணிமுத்தாநதிசெறிவிருத்தகிரியமர்பெரியநாயகியே.

### சிவஞானவள்ளலார்

### பதிபசுபாசவிளக்கம்.

இப்பியிற் பிராந்தியாலே யிரசிதந் தோன்றுமாபோல்
மெய்ப்படுமென்னிலிந்த வியன்சகமுதித்ததென்றே.

### ௩. மூன்றாவது பாசசங்கை.

ஒருவேதம் பஞ்சபாசங்களும் அநித்தியமென்று சொல்லிற்று, பின்னொருவேதம் கானற்சலம்போலத் தோற்றரவு மாத்திரமேயென்று சொல்லிற்று, பின்னொருவேதம் ககனாரவிந்தம், வந்தியாபுத்திரன், சசவிஷாணம்போல அநுபவத்திலே பஞ்சபாசமில்லையென்றுசொல்லிற்று, நாலாம்வேதம் மாயையேயில்லை, இருக்கிறதெல்லாம் பிரமமேயென்று சொல்லிற்று.

### குமாரதேவர் அத்துவிதவுண்மை. (௧௦அ)

பழுதையதனிற்றோன்றியிடும் பாம்பையுள்ளபடி நோக்கிற்
பழுதையாயே தோன்றியிடும் பாம்புமதுவாய்விடும் அஃதின்
பழுதிற் சிவத்திற்றோன்றியிடும் பன்மையுலகை நோக்கியிடின்
பழுதிற் சிவமேயாய்த்தோன்றும் பன்மையுலகு மதுவாய்ப்போம்.

மாயையெனு மிவ்வுரைக்கருத்தம் மதிக்கில் யாதொன்றில்லாதததுவே.

### வீராகமம்.

சமயவாதங்கள் நீக்கித் தத்துவமித்தை யாக்கி.

### அறிவானந்த சித்தியார்.

கானலைநீரென்றுகண்டு பருகிடக் காதலித்தே
போனவர்தாமய லென்றது கொண்டு பொருந்துவபோ
லானசகத்தி லடைந்தபொரு ளிவையான தெல்லாம். (௧௧)

### திருப்போரூர் சந்நிதிமுறை.

கானலைநீ ரன்றென்று காட்டக்கண்டா னொருவன்
மானலநீ ரென்று மயங்கல்போல்—நீநலமாய்ப்
பொய்யுலகம் பொய்யாகக் காட்டியும் போரூரனே
மெய்யென வுண்ணிணைந்தேன் மிக.

பந்தஞாலம் பொய்யென்றிதன்மூலம் நீ பகரக்கண்டும்படிறேன் மய
ங்கினேன்.

### தாயுமானவர்பாடல்.

பொய்யானவுலகத்தை மெய்யாநிறுத்தி
யென் புந்திக்குள் இந்திரசாலம் சாதிக்குதே,
அண்டபகிரண்டமு மாயாவிகாரமேயம்மாயை யில்லாமையேயாம்,
இந்திரசாலங்கனவு கானனீரொனவுலக மெமக்குத்தோன்ற,
முற்றுமில்லா மாயையதனால்,
தேகமான பொயை,
ஐந்துபூதமு மொருகானனீரொன,
அகிலம் மாயை கான்முயற்கொம்பே யென்கோ கானலம் புயலேயெ
ன்கோ வான்முகமுளரியென்கோ,
ஜகம்பொய்யெனத் தம்பட்டம் அடியே,
எனதென்பதும் பொய்யானெனல் பொய்எல்லாமிறந்தவிடங்காட்டும்
நினதென்பதும்பொய் நீயெனல்பொய் நிற்கும் நிலைக்கேநேசித்தேன்,
கடத்தை மண்ணெனல் உடைந்தபோதோ இந்தக்கருமச்சடத்தைப்
பொய்யெனல் இறந்தபோதோ சொல்லத்தருமம்,
முற்றும் மாயமாய்,
பொய்யாருலகம்,
சகமனைத்தும் பொய்யெனவே,
அற்பமனமே யகிலவாழ்வத்தனையும் சொப்பனங்கண்டாய்,
பொருந்து ஜகமனைத்தினையும் பொய் பொய்யென்று புகன்றபடி,
ஞாலத்தை மெய்யெனவே நம்பி நம்பி நாளுமென்றன் காலத்தைப்
போக்கி யென்னகண்டேன்,
பொய்யுலக வாழ்க்கை,
பொய்யெல்லாம் ஒன்றாய்ப்பொருத்திவைத்த பொய்யுடலை மெய்யெ
ன்றால் மெய்யாய்விடுமோ,
உண்டுபோலின்றாமுலகைத்திரமெனவுட்கொண்டு நான்பெற்றபலன்
கூறாய்,
கானற்சலம்போன்ற கட்டுழலைப் பொய்நீர,
பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே.

கோளரியார் பிரபஞ்சத்தைக் காட்சிப் பிரமாணம் என்கிறார். அது உண்மைதானாவென்று பார்ப்போம். பிரத்தியக்ஷத்தில் யதார்த்தம் சந்தேகம் விபரீதமென்று மூவகை முன்னரே கூறினும். இம்மூன்றில் யதார்த்தப் பிரத்தியக்ஷந்தான் அங்கீகரிக்கத்தக்கது. சந்தேக விபரீதங்கள் அங்கீகரிக்கத்தக்கனவன்று; அதிலும்விபரீதப்பிரத்தியக்ஷம் சுத்தமாய் அங்கீகரிக்கத்தக்கதேயல்ல. ஆயினும் யானைகள்போன்ற

பரசமயங்களுக்கெல்லாம் சிங்கம்போன்ற இச்சித்தாந்தசைவர், உலகு, விபரீதப் பிரத்தியக்ஷமாகவாவது உளதெனக் காட்டுவாரானால் அவருக்கு வேதாந்த கோளரியென மற்றொருபேரும் சிறப்பாக நாம் தருகின்றோம். திருட்டாந்தமாக ஒரு பொருளை அறியவேண்டுமாயின் அதற்குவேறாக நின்றே அறிகின்றோம். அதாவது அறியப்படும் பொருளுக்கும் அறிவானுக்கும் வேற்றுமை யிருக்கக் காண்கின்றோம். திருட்டாந்தத்தில் கண்ணுக்கும் கண்ணால் அறியப்பட்ட பொருளுக்கும் வேற்றுமை யிருப்பதுபோல உலகுக்கும் உலகை அறிவானுக்கும் வேற்றுமை யிருத்தல் வேண்டும். காட்சிப் பிரமாணமாவது கண்ணுக்கும் கண்ணால் அறியப்பட்ட பொருளுக்கும் சம்பந்தம். அப்படியே உலகுக்கும் உலகை யறிகிற அறிவுக்கும் சம்பந்தம்.

(சம்பந்தோஹி சம்பந்திப்யாம் பின்ன:தந்விஷ்ட:
ஆச்ரயதயாவிசிஷ்ட புந்தி நியாமக:)

“சம்பந்த மென்பது சம்பந்திகளின் வேறாய் இருபொருள்களிலு முள்ளதாய் ஒன்றை யொன்று பற்றிய தென்னு முணர்ச்சியைத் தருவதாயது” என்பதே சம்பந்த இலக்கணமாம். கண்ணா லறியப் படுவதுபற்றி யுலகைச் சத்தியமென்று சொல்லுகின்றா மென்னின், கண் உலகப்பொருளில் ஒரு பாகமாகலின் அது பொருந்தாது. திருட்டாந்தத்தில் கண்ணுக்கும் பொருளுக்கும் பேதமிருப்பது போன்று, தாட்டாந்தத்தில் அறிவானுக்கும், கண்முதலிய பொருள்களெல்லாங் கொண்ட வுலகிற்கும் பேதமிருத்தல் வேண்டும். ஆத்துமா, கண்ணைத் துணையாகக்கொண்டு உலகைக்காண்கின்றதேயன்றி, கண், தானே யறியவில்லை யென்னின், ஆத்துமா, உலகப்பொருளான வுடலையும், அவ்வுடலின் ஒருகூறான கண்ணையும் அபின்னமாய்க் கலந்து அறிகின்றது. அப்படியே திருட்டாந்தத்தில் கண்ணானது பொருள்களோடு அபின்னமாய்க் கலந்து அப்பொருள்களை யறிகின்றதா? இல்லையே. அப்படி யறிந்தாலல்லவா ஆத்துமா உலகையறிவது காட்சிப்பிரமாணமென்று சொல்லலாம்? ஆன்மா உலகை யறிவது பிரத்தியட்சமாயின், உலகப் பொருளான கண்ணுடன் அபின்னமாய்க் கலவாது அறியவேண்டும். அப்படி யறிந்தால்தான் காட்சிப்பிரமாணமென்று சொல்லத்தகுதியாம். கண்ணுக்குத்தோற்றும் ஒரு அற்பப் பொருள், பூதக்கண்ணாடியினால் பார்க்கும்போது மகத்தாய்த் தோற்றுகின்றது. கண்ணுக்கு அற்பமாயேனும் தோன்றாவிடத்து, அப்பொருளிருப்பதாய் ஒத்துக்கொள்வோமா? அது பிரத்தியட்சப் பொருளென்றுதான் கூறுவோமா? அப்படியே கண்ணின் துணையின்றி ஆத்துமா எவ்வகையாலேனும் ஒருவிதமாய் உலகை யறியுமாயின் அதுகொண்டு; உலகு உள்ளதென்றும் அது காட்சிப் பிரமாண மென்றுங் கூறலாம்; அங்ஙன மில்லையே. திருட்டாந்தத்தில் கண் காண்பான்; கண்ணால் அறியப்பட்ட கடபடாதிகள் காணப்பட்ட பொருள்கள்.

கண்ணானது பிரத்தியேகமா யிருந்து, கண்ணுக்குப் பின்னமான கடபடாதிகளை யறிகின்றது. கண்ணானது கடபடாதிகளின் ஒருபாகத்தோடு பிறிவற்று அபின்னமாய்க் கலந்து மற்றப் பாகங்களை யறிவதில்லை. அவ்வாறு காண்பான் ஆத்துமா; காணப்பட்ட பொருள் உலகு. கண்ணானது உலகினதோர்பாகம். ஆத்துமா தனியே வேறாயிருந்து உலகை யறியவில்லை. ஆத்துமா அறிபொருளெனப்படும் வுலகத்தினோர் பாகமான கண்ணோடு அபின்னமாய்க் கலந்து, மற்றோர் பாகமான வுலகை யறிகின்றது. ஆதலால் உலகு காட்சிப்பிரமாணமென்றுகூறுவது எட்டுணையும் பொருந்தாது. நாம் பார்க்கப்படும் பொருளின் ஓர் பாகத்தோடு அபின்னமாய்க் கலந்து மற்றோர் பாகத்தை யறிவோமாயின் பொய்யும் மெய்யாகத் தோற்று மென்பதற்கு நாம் தினந்தோறும் அநுபவிக்கும் ஓர் திருட்டாந்தங் கூறுகின்றோம். பொய்யான கனாவுலகை அக்காலத்தில் உண்மைப் பொருளென்றே யறிகின்றோம். அதிலும் கண்ணினாலேயே அறிகின்றோம். அதை யுண்மை யென்று கொள்ளலாமா? கனாவுலகு பொய் யென்பதி லாக்ஷேப மில்லை. அந்த வுலகை அங்கு காண்கிற மனிதனும் அந்த வுலகப்பொருளில் ஓர்பாகம். அந்தப் பாகத்திலோர்பாகம் ஷை மனிதனது கண். காண்கின்ற (கனாவுலகமனிதனது) அந்தக் கண்ணும் காணப்பட்ட அவ்வுலகமும் ஓரே பொருள். கண்ணானது உலகை யறிகின்ற தென்பது ஒருபொருளின் ஓர் பாகம் மற்றோர்பாகத்தை யறிகின்றதா யாகின்றது. அப்படியே இச்சாக்கிர வுலகைக் கண்ணறிகின்றதென்பதில் கண்ணுக்கு இவ்வுலகு காட்சிப்பிரமாணமா யிருக்கின்றது. கண்ணோ வுலகின் ஓர்கூறு. ஓர்கூறு மற்றோர் கூற்றை யறிகின்ற தென்பதே காட்சிப்பிரமாணமாயிருக்கின்றமையின் இது காட்சிப்பிரமாணமாகாது. திருட்டாந்தத்தில், கண, கடபடாதிகளை யறிவது காட்சிப்பிரமாணம். இதில் கண் ஒருபொருள்; கண்ணால் அறியப்பட்டகடம் ஒருபொருள். கண்ணினது ஓர்கூறு கடமல்ல; கடத்தினதோர் கூறுங் கண்ணல்ல. இரண்டும் வேறுவேறு பிரத்தியேக பின்னப்பொருள்கள். இப்படியிருப்பதுதான் காட்சிப்பிரமாணம். இவ்வாறு தாட்டாந்தத்தில் உலகும் கண்ணுமாகா. திருட்டாந்தத்தில் கண்ணுக்குக் கடம் எப்படி விஷயமோ, அப்படியே தாட்டாந்தத்தில் காண்பானுக்கு உலகு விஷயமாம். திருட்டாந்தத்தில் கண்ணுக்குக் கடம் எப்படிப் பின்னமோ அப்படியே தாட்டாந்தத்தில் காண்பானுக்கு உலகு பின்னமாதல்வேண்டும். கண்ணால் உலகு அறியப்படும்போது கண்ணும் உலகும் ஒருபொருள், கண்ணால் கடத்தை யறியும்போது கண்ணுங்கடமும் பின்னப்பொருள்கள். கண்ணால் உலகை யறியும் போது உலகமென்னுஞ் சொல்லில் கண் அடங்கிவிட்டமையால் இரண்டு மொன்றுதான். கண்ணும் கடமும் அவ்வாறு ஒன்றில் ஒன்று அடங்கவுமாட்டாது; இரண்டும் ஒரு பொருளுமல்ல. ஆதலால் உலகு காட்சிப்பிரமாண மென்றல் சற்றும் பொருந்தாமை காண்க.

கோளரியார்கூறும் இன்னொரு விந்தையும் அதன் மறுப்பும்வருமாறு: "மாயை அநிருவசனீயமாயின், அதன்காரியமாகிய பிரபஞ்சம் சூனியமாதல் வேண்டுமோதலா லென்பது"ஆம். காரணத்தின் தன்மை காரியத்திலிருக்கலாமேயன்றி மாறான தன்மை யிருப்பது நியதமன்றே. பொன்னாலான பூடணம் பொன்மயமாமே யன்றி வெள்ளிமயமாயிருத்தல் பிரத்தியக்ஷ விருத்தமன்றோ ? மரத்தாலாய யானை வாகனம் மரமயமாயிருக்குமே யன்றி இரும்புமயமாயும் வெள்ளிமயமாயும் பொன்மய்மாயு மிருத்தல் கூடாதே. அங்ஙனமே அநிர்வசனமான மாயாகாரியப் பிரபஞ்சம் அநிர்வசனீய மாகலாமே யன்றிச் சூனியமாதல் வேண்டுமென்ப தெங்ஙனமாகும் ? காரணம் சூனியமாயின் காரியமும் சூனியமாம். காரணம் அநிருவசனீயமாயின் காரியம் சூனியமாமா ? காரண வியற்கைக்கு மாறாகக் காரிய மெங்கிருந்து வரும்? கோளரிக்குப் பயந்து இனியியற்கைப் பிரமாணத்துக்கு மாறுண்டாம்போலும்! அநிருவசனீயத்திற்கும் சூனியத்திற்குமுள்ளவித்தியாசமிவ்வகைப்பட்டதென இக்கோளரிக்குக் கிஞ்சித்துந் தெரியாது. பாவம் என் செய்யும்கோளரி! அதற்குத் தெரிந்ததை வஞ்சகமின்றிச் சொல்லிவிட்டது. எப்படியிருந்தாலும் கோளரி கோளரி தானே ! தெரியாத கோளரிக்கு அதன்பொருளை விளக்கிக் காட்டுவோம். கோளரியே! சூனியமென்பது இன்மையையே வடிவமாகப்பெற்றது. அதற்குவமானம் வான்மலர், மலடிமகனும். அநிருவசனீய மென்பது சத்துமல்லாமல் அசத்துமல்லாமல் சதசத்துமல்லாமல் இன்னதன்மைத்தெனக் கணிக்கப்படாத இலக்கணத்தைப் பெற்றது. அது ஒரு சத்துப் பொருளிடத்து உண்மைபோல் மற்றொரு பொருள் காணப்படுவது. அதற்குவமானம் கயிற்றரவு, கானனீர், கனவுலகு முதலனவாம். இந்தப் பேதந்தெரியாது "எல்லசெட்டிலக்க ஏகலக்க"என்பதாய்க் குழப்பிவிடுவது தகுதியன்று.

இத்துடனே இக்கோளரியார்வாய்மூடவில்லை. இன்னுங்கொஞ்சம் மேலே போகின்றார். அதையும் பார்ப்போம். "அசத்தறிவுக்கு
"ஞேயமாகுதற்குரிய தருமம் பரப்பிரமப் பொருட்கு இல்லை யென்ப
"தொக்கும்" என்றுகூறி, அதற்குமேல் "சதசத்தாயவுயிருருணர்
"வுக்கு ஞேயமாதற்குரிய சிற்குணமும் மற்றதற்கின்றாமாயின், அப்
"பெற்றித்தாயதொரு பொருளுண்டென் றறிந்ததுதான் எவ்வளவை
"பற்றியோ ? அளவைகளால் ஓராற்றானும் அங்ஙனம் அறியப்படா
"தது சூனியமாவதன்றிச் சத்தான பிரமப் பொருளாவ தெங்ஙனம்"
என்கிறார். இதிலுள்ள ஆபாசங்கள் மிகஅதிகம். வேதாந்திகள், ஜீவனை அசத்தென்று சொல்வதாகச் சொல்லுகிறார். தம்பக்ஷத்திலோ சதசத்தென்று வைத்துச் சொல்லுகின்றார். அசத்துக்கும் சதசத்துக்கும் வித்தியாசம் எவ்விதமாய்த் தீர்மானித்தாரோ அறியேம். சத்தென்றால் உள்ளது; அசத்தென்றால்இல்லது; சதசத்தென்றால் உள்ளது இல்லாதாம். ஜீவன் உள்ளதாகவாவ திருக்கவேணடும்; இல்ல

தாகவாவ திருக்கவேண்டும். உள்ளதும் இல்லதுமாய் ஒருபொருள் எப்படி யிருக்கும் ? உள்ளதும் இல்லதுமாய ஒருபொரு ளிருக்கின்ற தென்ப தெங்ஙன மிருக்கின்ற தென்னின் இருளும் ஒளியுமாய்ச் சூரி யனிருக்கின்றானென்று சொல்வதுபோ லிருக்கின்றது. மலடிமகன் இருக்கின்றானா ? இல்லையா ? என்று கேட்கும் கேள்விக்கு இரண்டில் ஒன்று சொல்வதைவிட்டு இரண்டையுஞ்சேர்த்து, இருக்கிறான் இல் லையென்று சொன்னால் ஒப்புவரோ ? ஒன்றுக்கொன்று விரோதமான இருவித தருமங்கள் ஒருபொருளினிடத்தில் இருத்தல்கூடுமோ? ஆனா ல் இவர் ஜீவனைச் சதசத்தென்று சொல்வது உண்மைதான். அதற் குப்பொருள் யாதெனின் அசத்தே. யாங்ஙன மென்னின் கானனீர் முன்பு சத் (உள்ளது) தாயிருந்தது; பிறகு சோதனையில் அசத் (இல்லது)தாய்ப்போய் விட்டது. சோதனைக்குமுன் சத்தாயும் பி ன்பு அசத்தாயும் போயினமையின், சத்து, அசத்து ஆகிய இருவித சொல்லையும் கானனீர் ஏற்கின்றது. அதுபற்றிக் கானனீரைச் சதசத் தென்று கூறுவது தகுதியாகும். கானனீர் முன்பு சத்தாய்க் காணப் பட்டுப் பின்பு அசத்தாய்ப்போய் அது காரணமாகச் சதசத்தென்று பேர்பெற்றாலும், கானனீர் உண்மையில் அசத்தேயா மென்பதற்கு ஆக்ஷேபமுண்டு கொலோ ! எது சதசத்தோ அது உண்மையில் அச த்தேயாமென் றுறுதிமொழி கூறலாம். அங்ஙனமாக வேதாந்திகள் உ யிரை அசத்தென்று கூறுவதாகவும் தாம் சதசத்தென்று கூறுவதாக வும் அதில்வித்தியாசம் ஏதோ பலமாயிருப்பதாகவும் காட்டவந்தது தெரியாமையாம். வேதாந்திகள் உயிரான ஜீவனை ஒரு அவசரத் தில் சத்தாகவும், ஒரு அவசரத்தில் சதசத்தாகவும், ஒரு அவ சரத்தில் அசத்தாகவுஞ் சொல்லி, இவைகளை யெல்லாம் பூர்வபக்ஷப் படுத்தி, முடிவில் சதசத் விலக்ஷணமான அநிருவசனீய மென்று சொல்லுகின்றார்கள். சத்து என்று சொன்னால் சத்தானசிவம் நீக்கமின்றிப் பூரணமாய் நிறைந்திருப்பதால் ஜீவனிருக்க விடமில்லா மற்போம்; அசத்தென்று சொல்லின் மலடிமகனைப்போல் முற்றுமில் லாமற் போகவேண்டும். ஜீவனிருந்து சுகதுக்கங்களை அநுபவித்துப் பிறந்திறக்கக் காண்கின்றோம். ஆதலால் அசத்தென்றுஞ் சொல்லப் படாது. சதசத்தென்னின் மேற்படி இருவித குற்றங்களும் வந்து பொரு ந்தும். சத்து, அசத்து, சதசத்தாகிய மூன்றுக்கும் குற்றம் நேர்கின் றமையால் சதசத் விலக்ஷணமெனச் சொல்லப்படுகின்றது. இதற்கே ஓர் பரியாய நாமமாக அநிர்வசனம் எனச் சொல்லுகின்றார்கள். இந் தச் சூட்சுமத்தை யறியாமல் வேதாந்திகள் உயிரையசத்தென்றுரை ப்பதாய்க் கூறுவது வேதாந்தவாசனை யில்லாமையைத் தெரிவிக்கிற து. வேதாந்திகள் பூர்வபக்ஷமாய்ச் சொல்லித்தள்ளுவதைச் சித்தாந் தமாய் வைத்துக்கொண்டதோடு தமது குற்றத்தைச் சொல்லாமல் மறைத்து, வேதாந்திகளுடைய சித்தாந்த மல்லாததைச் சித்தாந்த மாய்ச்சொல்லி அதை மாத்திரங் குற்றங்கூறிப்பேசுதல் கோளரிக்கழு

காமா? சதசத்தென்பதற்குச் சத்தென்று பொருள் கொள்ளுகின்றா
மென்னின் உயிர் சத்தென்று பகரும் பக்ஷத்தில் சிவனுக்கு நிறை
வில்லாமை யென்னும் குற்றம் வருவதால் அது பொருந்தா தென்ப
தாம். இதைப்பற்றி முன்பும் வரைந்திருக்கின்றனம். ஆண்டுங்கண்டு
தெளிந்திடுக. அவ்வாக்கியத்தி லின்னொரு தோஷமுமுளது. 'அசத்
தறிவுக்கு ஞேயமாகுதற்குரிய தருமம் பரப்பிரமப் பொருட்கு இல்
லை யென்பதொக்கும்' என்பதனால் "சத்தறிவுக்கு ஞேயமாகுதற்கு
ரிய தருமம் பரப்பிரமப் பொருட்கு உண்டென்பதொக்கும்" என்றா
கின்றது. ஞேயமாவது காணப்படும்பொருள். பிரமப் பொருளான
சிவனைக் காணப்படும்பொருளாக்குகிறார். இது வெகு சூட்சுமபுத்தி!
எது காணப்படும் பொருளோ அது ஜடப்பொருளாமே யன்றி யோர்
போதும் சித்துப்பொரு ளாகாதென்பது திண்ணம். இது சுருதியுக்தி
அனுபவ சம்மதம். இங்ஙனமாகச் சிவனைக் காணப்படு பொருளாக்கி
ஜடமாக்கப் பார்க்கின்றனரோ! இதற்கியாம் யாது செய்வேம்! திருட்
டாந்தமாகத்தினந்தோறும்நம்மால் அறியப்பட்டபொருள்களெல்லாம்
ஜடமாயிருக்கின்றனவேயன்றிச்சித்துப்பொருளாயிருக்கின்றனவா? யா
ரேனும் எக்காலத்தேனும் எத்தேசத்தேனும் அறிவைக்கண்டதாகக்
கதையிலாயினுங் கேட்டேனு மிருக்கின்றனரா? ஒரு அறிவு
இன்னொரு அறிவை யறிய மாட்டா தென்பது எல்லோரு
க்கும் அனுபவமா யிருக்க, இந்தக் கோளரி மாத்திரம் அறிந்தது
போலப் பகடித்தனம் புரிவதென்னேயோ! இது கோளரியா யி
ருப்பதால் இதற்கு மாத்திரம் அப்படிப்பட்ட சாமர்த்தியமுண்
டுபோலும்! சத்தறிவுக்கு ஞேய மாதற்குரிய தருமம் சிவனுக்
கிருப்பதாகக் குறிப்பாய்க் கூறிவிட்டு, உடனே அதற்கு முரணாக,
'சதசத்தாய வுயிரருளுணர்வுக்கு ஞேயமாதற்குரிய சிற்குணமும்
அதற்கின்றாமாயின்' என்கிறாரே. உயிர் சதசத்தாயபோது அத
னது அறிவுஞ் சதசத்துத்தானே. சத்தறிவும் அசத்தறிவுமான வுயிரி
னது அறிவு உண்மையில் சத்தா? அசத்தா? சத்தானால் அசத்தாகா
து; அசத்தானால் சத்தாகாது. எது சதசத்தோ அது அசத்தேயா
மென முன்பு கூறியதுபோல, எது சதசத்தறிவோ அது அசத்தறி
வேயாமென்று சொல்லவேண்டுவது நியாயம். அசத்தறிவுக்கு ஞேய
மாகுதற்குரிய தருமம் பரப்பிரமப் பொருட்கு இல்லையென்று சொ
ல்லியகோளரியார், தாமாவது உயிருக்குச் சத்தறிவு சொல்லுகின்றன
ரோ என நோக்கின், இல்லை! இல்லை!! அசத்தறிவென்றே சொல்லு
கின்றார். இந்த அநியாயத்தை யாரிடத்தில் சொல்லி முறையிடுகின்
றது! கோளரியார், உயிருக்குச் சதசத்து இலக்கணஞ் சொல்லுகின்
றார். அது அசத்தாகவே முடிகின்றது. வேதாந்திகளோ சதசத்வி
லக்ஷண அநிருவசனீய மென்கிறார்கள். இவ்விரண்டினது வித்தியாச
த்தை யிதை வாசிக்கும் புத்திமான்கள் அறியாமற்போகார். அசத்
தறிவிற்கு ஞேயமாகாத பிரமம் சதசத்தறிவிற்கு மாத்திரம் ஞேய

மாமா? சதசத்தும் அசத்திலடங்காமல் நிற்குமோ? அசத்தறிவுக் காணுலும்சரி, சதசத்தறிவுக்காணுலுஞ்சரி, சத்தறிவுக்காணுலுஞ்சரி, ஞேயமாகும் பொருளெல்லாம் சடமாயிருக்க வேண்டும். அன்றிக் காணும் அறிவு சத்தாயிருந்து விட்டால் ஞேயம் கண்டப்பொருளாய் விடும். இவ்வளவு பெருங்குற்றம் வருவதை யறியாமல் வாய்புளித்த தோ, மாங்காய் புளித்ததோ என முன் பின் யோசனை யில்லாமல் வாயில் வந்தபடி சொல்லிவிட்டு, ஜணப்பன்வீட்டுக் கோழித் தானே விலங்கில் மாட்டிக்கொள்வதுபோல விலங்கில் மாட்டிக் கொள்ளு கின்றார். திருட்டாந்தத்தில் கடம் சத்து; மலடிபுத்திரன் அசத்து; கானனீர் சதசத்து. கடமுள்ளதாதலால் சத்து; மலடிபுத்திர னில் லாதவனுனமையால் அசத்து; கானனீர் முன்பு உள்ளதாயிருந்தமை யால் சத்தும் சோதனையில் இல்லாமற் போதலால் அசத்துமாம். ஆத லால் கானனீர் சதசத்தாம். இப்படியிருந்தாலும் சத்து அசத்து என இரண்டாய்ப்பிரிக்கும்போது சதசத்தைச்சத்தில்அடக்கலாமா? அசத் திலடக்கலாமா? கானனீரைச் சத்திலடக்கிச் சொல்லலாமா? அசத்தி லடக்கிச்சொல்லலாமா? அசத்தில் அடக்கியேசொல்லவேண்டும். அப் படியேசதசத்து இலக்கணஞ்சொல்வதற்கிசையுந்தவுயிரைச்சத்திலடக் கிச் சத்தெனச் சொல்லலாமா? அசத்திலடக்கி அசத்தெனச் சொல் லலாமா? அசத்திலடக்கி அசத்தெனச் சொல்வதுதான் நியாயம். உயிர் அசத்தாகிறபோது அதனறிவும் அசத்தாகத் தானே யாகவே ண்டும். அசத்தறிவுக்குப் பிரமம் ஞேயமா? எது ஞேயப்பொருளோ அது அசத்தாயும் ஜடமாயு மிருக்குமென்பது நிச்சயம். தாமே யுயி ருக்கு அசத்து இலக்கணஞ் சொல்லிவிட்டு, அவ்வாறு சொல்லாப் பிறரை அவ்வாறு கூறுவதாகச் சொல்வது துரபிமானமன்றி வேறு யாதுரைப்போம்!

முடிவில் அசத்தறிவாகும் சதசத்தாயவுயிர், அருளுணர்வு பெ றுவதாகச் சொல்லுகிறார். அசத்தாக முடியும் உயிர், சிவனுடை அருள் ஞானத்தைப் பெறுவதெங்ஙனமாகும்? அசத்தாக முடியும் உயிர், அசத்தறிவைத் தானே பெற்றிருக்கவேண்டும். அசத்தறிவுக் குச் சத்தான சிவஞானம் எப்படியுண்டாகும்? அசத்துச் சத்தான பிறகன்றோ சத்தான சிவஞானத்தைப் பெறவேண்டும்? அசத்துச் சத்தாமா? சத்து அசத்தாமா? கயிற்றரவு உண்மையான அரவாமா? உண்மையான அரவு கயிற்றரவாமா? ஆதலால் தீர்மானத்தில் அசத் தாகும் சதசத்தாய வுயிர், சத்தாகிய சிவ அருளுணர்வைப் பெறு மென்பது சொல்லளவே யன்றிப் பொருளளவல்ல.

"சிவத்தைநோக்க அசத்தும் உலக ஜடப்பொருளை நோக்கச் சத் துமாதலால் உயிரைச் சதசத்தென்று சொல்லுகின்றோம்" என்னின் பரமார்த்தமான சிவ சந்நிதானத்தில் உயிர் அசத்தானபோது அதா வது இல்லாதபோது சிவ சந்நிதானத்தில் பத்தனுயிருப்பதும் சிவ ஞானத்தைப் பெறுவதும் மோக்ஷம் அடைவது மெங்ஙன மாகும்?

உலகைஅநிருவசனமென்று எந்த மதத்தவரும் ஒப்பவில்லையென்று கூறுமிவர், உயிரைச்சதசத்தென்றுமாத்திரம் எந்தமதத்தவரேனுமொப்பினதாகக் காட்டுவாரா? இவர் மதப்படி உலகம் சூனியமும், உயிர்கள் விவகாரத்தில் சத்தும் உண்மைதிருஷ்டியாகிய சிவதிருஷ்டியில் அசத்துமாதலால் உண்மையில் எல்லாத் திருசியங்களும் சூனியமாகின்றன. அத்துவிதிகள் மதத்தில் எல்லாம்அநிர்வசனீயமாம்; சூனியமல்ல. இப்படியிருக்க அத்துவிதிகளை மறுக்கப்புகுவ தென்னேயோ! இவர் மதத்துக்கும் விரோதமாக வுயிர் உலகங்களைச் சத்தியமெனத் தாபிக்க எழுதுவது வீண்செயலாம். உலகைமாத்திரம் சத்தெனச் சொல்வாரேல் சிவனைநோக்கச் சேதனமானவுயிரே அசத்தானபோது ஜடவுலகுமாத்திரம் சத்தாவதெங்ஙனமாகும்? இனி உலகு அசத்தாகவும் உயிர் சதசத்தாகவும் சிவம் சத்தாகவும் கூறும் சிவாகமங்களும், சிவத்தைத் தவிர மற்றப்பொருள்கள் விவகாரத்தில் சத்தாய்ப் பரமார்த்தத்தில் அசத்தாய்ச் சதசத்விலக்ஷண அநிர்வசனீயமென்றே போதிக்க எழுந்தனவென்றறிக. ஒரு கடத்தில் செம்மை கருமையான இருகுணங்கள் இருப்பதுபோல் ஒரு உயிர்க்குச் சத்துத்தன்மையும் அசத்துத் தன்மையும் பொருந்துமென்றுகூறின், கடம் அவயவமுள்ளதாதலின் ஒரு அவயவத்தில் ஒரு குணமும் மற்றொரு அவயவத்தில் மற்றொரு குணமும் இருக்கலாம். அவ்வாறு உயிர்க்கு அவயவமின்மையின் அதில் எதிர்மறைக்குணங்களிருத்தல் அமையாது.

கோளரியார் சத்தறிவென்றும் அசத்தறிவென்றும் சதசத்தறிவென்றும் அறிவை மூன்றாகப் பிரிக்கின்றார். சிவ அறிவு சத்தறிவென இவர் சம்மதிப்பார். ஜீவனை அசத்தறிவென வேதாந்திகள் கூறுவதாயும், இவர் மதத்தில் ஜீவன் சதசத்தறிவெனச் சொல்வதாயும் வரைகின்றார். இதைப்பற்றிக் கொஞ்சம் பேசுவோம். கண்ணால் அசேதன உலகை யறியும்போது கண் சித்தும், உலகு ஜடமுமாம். மனம் வேறுவிஷயத்தை நாடுங்கால் கண்ணிருந்தும் காண்டலில்லை. காண்டலில்லாமையால் கண் அப்போது ஜடமாகின்றது. அசேதனவுலகை நோக்கக் கண்சித்தாயினும் மனத்தைநோக்கஜடமாகின்றது. ஒரு சமயத்தில் சித்தாயும் ஒரு சமயத்தில் ஜடமாயு மிருப்பதால் கண் ஜடசித்தென்றே கூறத்தகுதியாம். உலகுமாத்திரம் எப்போதும் ஜடந்தான். கண்ணைப்போலச் சித்ஜடமாகாது. கண்ணைநோக்க மனம் சித்தாயினும் உயிரை நோக்க ஜடமாம். ஆதலால் மனமும் சித்ஜடமாம். மனத்தைநோக்கச் சித்தாயினும் சிவத்தைநோக்க ஜீவன் ஜடமாம். ஆதலால் ஜீவன்ஜடசித்தென்று சொல்லப்படுகின்றது. இதுபற்றியே ஜீவனைச் சிதாபாசனென்று வேதமுதலியகலைகள் கூறுகின்றன. சிதாபாசனென்பதற்குப் பொருள் சித்துப்போலி, அல்லது போலிசித்தாம். கீழேயிருக்கப்பட்டவற்றை நோக்க மேலே யிருப்பவை சித்தாயினும் மொத்தத்தில் சிவத்தைநோக்க யாவும் ஜடந்தான். அங்ஙனமே மலடிபுத்திரன், ஆகாயப்பூ இவைகளை நோக்கச் சேதன

சேதனங்கள் சத்தாயினும் சிவத்தைநோக்க அசத்தாம். எது அசத்
தோ அது ஜடமுமாகும். சிவம் என்றும் சத்து; ஆதலால் அது என்
றும் சித்தாம். என்றும் சத்தும் என்றும் சித்துமான சிவம் நீக்க
மின்றி யெங்கும் பூரணமாயிருத்தலாலும்மற்றொருபொருளிருக்கவிட
ங்கொடாமையாலும் இருக்கமுடியாமையாலும் வேறுபொருள் சத்
தாகவும் சித்தாகவு மிருக்குமென்று சொல்வது பதார்த்தசோதனை
செய்தறியாத குற்றமாம். எது ஒருசமயம் சத்துச்சித்தாகவும் பிறி
தொரு சமயம் அசத்து ஜடமாகவு மிருக்கின்றதோ அதைத்தான்
வேதாந்திகளான அத்துவிதிகள் அநிர்வசனீயமென்று சொல்லுகின்
றார்கள். வேதத்தின் முடிவும் ஆகமத்தின் முடிவும் இதுதான்.

'அப்பெற்றித்தாய தொருபொருள் (சிவன்) உண்டென்றறிந்தது
தான் எவ்வளவைபற்றியோ?' எனக் கேட்டகேள்வியு மாபாசக்
கேள்வியெனக் காட்டுவாம். இதற்குப்பதில் அநுமான அளவையா
லும் ஆகமஅளவையாலு மென்கின்றோம். அளவையென்பது ஒரு
வாறேயன்றி முற்றுமல்ல. பிரமாணாதீதப்பொருளைப் பிரமாணப்படுத்
திச்சொல்வது சிவத்தினிலக்கணம் அறியாதகுற்றமாம். சிவம் அளக்
கற்பாலதென்னின் எது அளவையான் அளக்கற்பாலதோ, அது அச
த்தாயும் சடமாயும் போம்; அன்றி அறிபடுபொருள்களும் அங்ஙன
மாம். கோளரியார் சிவனை ஞேயமாதற் குரியதென்கிறார். எது ஞே
யப்பொருளோ அதுவும் அசத்தும் ஜடமுமாம்; அன்றிக் காண்பா
னும் காட்சியும் காணப்பட்ட பொருளும் அசத்தும் ஜடமுமென்று
நூல்கள் கோஷிக்கின்றன. இது நமது அநுபவமுமாம். அதுபற்றியே
சிவஞானபோதம் உணருரு அசத்தென்றும், யாவையுஞ் சூனியம் சத்
தெதிராகலின் சத்தேயறியாது அசத்திலதறியாதென்றும் கூறுகின்
றது. சொப்பனவுலகு எப்படி மனத்தினிடத்துத் தோன்றி விளங்கி
லய மாகின்றதோ, அப்படியே இச்சாக்கிரவுலகும் சிவத்தினின்றுந்
தோன்றி யிருந்து லயமாகின்றதென் றனுமானிக்கலாம். சிவனைப்
போல் விசாரிக்கிறவனும் அவ்வளவு சத்தாயிருக்க வேண்டுமென்கிற
அவசியமில்லை. சொப்பனவுலகத்தில் காண்பானும் காட்சியும் காணு
ம்பொருளுமான வுலகு எப்படிக் கற்பனையோ, அப்படியே இவ்வுல
கும் சிவத்தின்கண் கற்பனையாம். உண்மையான மனத்தில் சொப்
பனவுலகு கற்பனையாவதுபோல இவ்வுலகும் ஒரு உண்மைப்பொரு
ளில் கற்பனையாம். அந்த உண்மைப்பொருள்தான் சிவம் அல்லது
பிரமமாம். அப்படி அளக்கிறவனும் சத்தாயிருக்க வேண்டுமென்ப
திவர் கருத்து. அங்ஙனமாயின் அளக்கிறசேதனனும் அளக்கப்படும்
பொருளான சிவனும் அசத்தாய்ப்போம். "அளவைகளால் ஓராற்றா
னும் அங்ஙனம் அறியப்படாதது சூனியமாவதன்றிச் சத்தானபிரமப்
பொருளாவ தெங்ஙனம்?" என்கிறார். அளவைகளான் அறியப்படா
தது சூனியமென்கிற இவர், அறியப்படும் பொருளைச் சத்தென்று
சாதிப்பாரா? அப்பிரமப்பொருள் அளவைகளால் அறியப்பட்ட

பொருளுமல்ல; அளக்கப்படும் பொருளுமல்ல. அளக்கும் அல்லது அறியும்பொருள் அவ்வளவுதூரம் செல்லவுமாட்டாது. சொப்பனவுலகிலுள்ள மனிதர்களால் அதற்குக் காரணமான மனத்தை அச்சொப்பன வுலகினின்றே அளக்கமுடியுமா ? அறியமுடியுமா? அவ்வளவு தூரமெட்டுமோ ? அச்சொப்பனுவத்தையில் சொப்பன மனிதர்கள்: ஆகாயமலர், கயிற்றரவு, கானனீர் இவைகளைவிடச் சத்தும் சித்துமானாலும் காரணமான மனத்தைநோக்க அசத்தும் ஜடமுமாம். அப்படிப்பட்ட சதசத்தும் ஜடசித்துமான சொப்பன மனிதர்கள், தமக்குக் காரணமான சத்தும் சித்துமான மனத்தை யளக்கவும் அறியவும் எட்டவும் முடியாமைபோல, சதசத்தும் ஜடசித்துமான இச்சாக்கிரவுலக மனிதர்களால், காரணமான பிரமத்தையளக்கவும், அறியவும், எட்டவும் முடியாவென்பதாம். அதனால் சொப்பனவுலகிற்குக் காரணமான மனம் சூனியமாகாது. அதுபோலச் சாக்கிரவுலகிற்குக் காரணமான சிவம் சூனியமாகாது. சொப்பனவுலக காரண மனம் சூனியமானால் சாக்கிரவுலக காரண சிவம் சூனியமாகும். அளக்கற்பாலவையும் அளக்கும் பொருளும் அளக்குந் தொழிலுமான திரிபுடிகளும், ஞாதுரு ஞானஞேயங்களும் அசத்தும் சதசத்துமான பொருள்களிலேயேயன்றி முற்றும் சத்துப்பொருளான சிவத்தினிடத்தி லல்ல. உலகில் அளக்கிறபொருளும் அளக்கப்படு பொருளுமான இரண்டு பொருள்களும் அசத்தாயும் கண்டமாயு மிருக்கின்றன. ஆதலால் அளக்கச் சாத்தியப்படுகின்றது. சிவம் அங்ஙனங் கண்டப்பொருளன்றே. நீக்கமின்றி நிறைந்திருக்கும் பொருளாயிற்றே. ஒருவன், மற்றொரு பொருளை அளக்கும்போது அளப்பானுக்கு அளக்கப்படுபொருள் பேதமாயிருக்கின்றது. ஆதலால் அளத்தல் கூடும். அப்படியே சிவத்தை யளக்கப் புறப்படின், ஜீவனைவிடப் பேதமா யிருத்தல்வேண்டும். அப்போது சிவத்துக்குப் பரிபூரணஞ் சொல்லப்படாது; அபரிபூரணமே சொல்லவேண்டும்.

-"இன்னும் அதனை அறிதற்கென வேதாகமங்களை நிறுத்தியதும், சாதகங்களை வகுத்ததும் வீண்செயலாம்" என்றுங் கூறுகின்றார். பிரமம் அறியும் பொருளன்று; அறியாப்பொருளுமன்று. அறியும் பொருளானால் அசத்தாய்ப்போம்; அறிபடாப்பொருளானால் சூனியமாய்ப்போம். ஆதலாலிரண்டுமன்று; அதுவாகவே யாதல்வேண்டும். அறிபடுபொருள், அறிபடாப்பொருள்களான இரண்டுக்கும் அதீதமான நிஷ்களப்பொருள் சிவம். இவர் கூறுகிறபடி அளக்கற் பொருளென்பது முண்மைதான். ஆனால் அது நிஷ்கள சிவமாகாது; சகள சிவமாம். முன்னிலைச் சுட்டொழிந்து ஞாதுரு, ஞான, ஞேயங்களற்று விளங்கும் அந்த நிஷ்களப்பொருள், அறிபடுபொருளென்றும் அளக்கப்படுபொருளென்றும் சொல்வதுகூடாது. அப்படிச் சொல்லின் சுருதி ஸ்மிருதி புராண இதிகாச ஆகமங்கட்கு விரோதமாம். ஜீவனுக்கு ஜீவத்துவங்கெட்டுச் சிவமாய் விளங்குதற்கே வேதாகமங்

களை நிறுத்தியதும் சாதகங்களை வகுத்ததுமாம்; வீண் செயலன்று. வேதாகமங்களினுண்மைப்பொருளை யறியாமல் விபரீதப்பட்டுப் பேசுவதே வீண்செயல். முத்திநிலையை யுலகநிலையைப்போல் பேசுதலே இவரதுவாதம். இவரது முத்திநிலைமை வேதாந்திகட்குப் பந்த நிலைமையாம்.

சிவன் அளவைகளுக் கெட்டப்பட்டானென்பதற்குப் பிரமாணங்களாவன:—

### யசுர்வேதத்தில் கைவலியோபநிஷத்.

*சிந்திக்கக்கூடாதவராயும் காணக்கூடாதவராயும்...............இருக்கிற பரமேசுவரனை.*

*என்னைப் (பூரணமாக) அறிகிறவரில்லை.*

### சுக்கிலயசுர்வேதத்தில் நிராலம்போபநிஷத்.

*சுத்தம், சிவம், சாந்தம், நிர்க்குணம் இந்தச்சப்தங்களால் சொல்லத்தக்கதாயும், வாக்குக் கெட்டாததாயும் இருக்கிற சைதனியமே பிரமம்.*

### ருக்வேதத்தில் ஆத்மபோதோபநிஷத்.

*நான் ஊகத்தினுல் அறியப்படத் தக்கவனல்ல.*

### அதர்வணவேதத்தில் நாரதபரிவிராஜகோபநிஷத்
### 8-வது உபதேசம்.

*இந்திரியங்களால் அறியக்கூடியதல்ல; ஊகத்தினுலறியக்கூடியதுமல்ல; கருமேந்திரியங்களால் கிரகிக்கக்கூடியதுமல்ல; நிரூபித்துக் காட்டத்தகுந்ததுமல்ல; நினைப்புக்கெட்டினதுமல்ல; இணையிட்டுக்காட்டத் தக்கது மல்ல. சுவானுபவத்தினுலேயே அறியத்தக்கது......இப்படிப்பட்டதைத் துரியமென்று எண்ணுகிறூர்கள்.*

### முண்டகோபநிஷத்
### 2 - வது அத்தியாயம் 7 - வது வாக்கியம்.

*அது (ப்ரம்மம்) பெரிதாயும் திவ்யமாயும் மனத்தினுலும் எட்டிமுடியாத ரூபத்தை யுடையதாயும்.*

### ஷை ஷை 8-வது வாக்கியம்.

*(ப்ரம்மம்) கண்களாலாவது வாக்கினுலாவது மற்ற இந்திரியங்களினுலாவது கர்ம்மத்தினுலாவது கிரகிக்கப்படமாட்டாது.*

### பிரதம முண்டகம்
### 1 - அது அத்தியாயம் 6 - வாக்கியம்.

*அது (ப்ரம்மம்) அதிருசியம்; கிரகிக்கக்கூடாதது.*

### சூதசங்கிதை முத்தியுறு முபாயமுரைத்த அத்தியாயம்.

*வேதமுடியி னடிப்பவனீ வேதமளத்தற் கரியவனீ.* (௯௫)

### ஷை மோசகனை யுரைத்த அத்தியாயம்.

*ஆதியாயனுதியா யாதியந்த மில்லாதாயளவைக்கெட்டா*
*நீதியாய்ப் பரப்பிரமமாய்த் துரியாதீதத்து நிலையாநிற்கும்.* (௨௰)

ஷை ஞானயாக வைபவ முரைத்த அத்தியாயம்.

கறையறுசிற் சொரூபமாகிய பரமான்மா மேற்கனை பிரமாணங் களுக்குக் கோசரமதான, வறைவிடங்களுக்கு வேறாகி யிருக்கையினு லவைகளா லூற்றுணரப் பட்டதன்று. (உக)

ஷை சிவத்தல முரைத்த அத்தியாயம்.

சத்தமாருருவாய்ச் சத்தத்துட் பொருளாய்த்தகு சுயம்பிரகாசமாய்ச்சீர்,
ஒத்தநற் பிரத்தியக்கமுனளவை யுள்ளவைந்தினுக் ககோசரமாய். (எ)

ஷை வேதார்த்தத்தை யுரைத்த அத்தியாயம்.

காரணங்கடந்த வள்ளல் கறைமிடற் றிறைவன்சந்த
வாரணமுடிக்குமெட்டா வொருவனே. (உக)

பிரமகீதை

கடவல்லி சுவேதாசுவதர வுபநிடதங்களின் அர்த்தமுரைக்கும் அத்தியாயம்.

யாவர்க்குந் தெரிவருஞ்சிவன். (கசு)

ஷை கேனோபநிடதார்த்த முரைக்கும் அத்தியாயம்.

வாக்குமனமுங் கண்ணுமற்றுள இந்தியங்களுமே
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவைசெலமாட்டா. (சு)

பிரகதாரணியவுபநிடதத்தில்
மைத்திரேயப்பிராமணார்த்தமுரைக்கும் அத்தியாயம்.

ஒழிவிலாப்பரமயோகியரனுபவ முள்ளவாறுரைத்திடவெனக்கோர்
வழிபெறேனெடுமோன்மகேசன்மாமுனிவர் வானவருரைத்திடமாட்டார்
விழிமிகுஞ்சிவனால்விஞ்சையாஞ்சிவையால் விளம்பவும்படாததுவிளம்பு
மொழியெலாம்வந்துமோனபாவத்தே முடியுமந்நிலமதேமுடிவு.

கூர்மபுராணம் விசுவரூப அத்தியாயம்.

யாருமறியாத ஞானவுருவாய். (கசு)

இதுவன்று நின்ற திதுவன்றுநின்றதென வோதலன்றி மறையும், இது வென்றுரைக்கமுடியாது நின்றவெரிதும்மு வெய்யமழுவோய். (உசு)

இலிங்க புராணம்
மாயனு மயனுந்துதித்த அத்தியாயம்.

பண்டைமறையுங்காணாத பதுமமலர்மெல்லடி. (உ)

உள்ளும்புறம்புமுணர்வரிய துரியாதீதமாய் நின்றதோன்றால். (ரு)

ஷை மாயனுமயனும் வரம்பெற்ற அத்தியாயம்.

பழையமறைநான்கு முணர்தற்கெட்டா துயிர்க்குயிராய்,
நின்றமுதல்வன். (௪)

ஷை நான்முகனு மாயனுந் துதித்த அத்தியாயம்.

நினைவினுக்கெட்டா தொன்றாய் (உ)

ஷை மாயவனுந்திக்கமலத்தில் நான்முகன் றோன்றிய அத்தியாயம்.

பழந்தனிமறையுங் காண்பதற்கரிய பரஞ்சுடராகி. (கஉ)

ஷை கலியுகத்தியற்கை யுரைத்த அத்தியாயம்,

*பழமறையுங் காணுதபரமன்* (கூ)

ஷை திரிபுரமேரித்த அத்தியாயம்.

*மறையின்முடி மீதிருந்து மந்த மறையினு லென்றுமறியாத் தனிமுத லாய்.* (கஎ)

காசிகாண்டம்.

*எழுதருமறைகட்கெய்தா தெங்குமாய் நின்ருய் போற்றி*
*மொழியுடன் மனதுக்கெட்டா முழுப்பரம் பொருளேபோற்றி.*

விஷ்ணுபுராணம் 6-ம் அமிசம் யோகமார்க்கவுபதேசம்.

*ஜாதிமுதலான சகலபேதங்களுமில்லதாய் வாக்குக்கெட்டாத தாய்க் குறைவுமுதலான விகாரங்களின்றி யென்றுமொருப்படிப்பட் டதாய்ச் சுயம்பிரகாசமாயுள்ள ஞான ஸ்வரூபமானவஸ்து; அது பிர மமென்கிற பேருள்ளது.*

வாயுசங்கிதை

இருடிகள் பிரமலோகமடைந்த அத்தியாயம்.

*நான்மறை யின்னுமுணர்கலான்யாவனவிற்றிடற் கரியவன் யாவன்,*
*மோனமா யுறையுமுனிவராறு முற்றுநன்கறிகலான்யாவன்.* (ரு)

திருவிளையாடற்புராணம் மண்சுமந்த படலம்.

*மறைகளாலளவை தன்ருல் தேவரால் மனத்தால் வாக்கால் அறிவருஞ் சோதி யெங்கோன்.* (கoரு)

பாகவதம்.

*புனிதமற்றுன்னையல்லாப் பொருள்பரப் பிரமமல்ல*
*வெனவெடுத் துரைப்பதல்லா லீறுடு தோற்றமின்றித்*
*தனிமுதலாகிநின்ற சச்சிதானந்த மூர்த்தி*
*நினைவரும் சுடரோநின்ற நிகழ்த்துமா றறிகிலேமால்.*

மகா இதிகாசமாகிய சிவரகசியத்தில் ரிபுகீதை 18-அத்தியாயம்.

*வாக்குமுதற் கெட்டாவப்பரம்* (கச)

ஷை 19-அத்தியாயம்.

*சுருதியுமேகடந்த பரப்பிரமம்,* (கஎ)

ஷை 27-ம் அத்தியாயம்.

*சுருதிமுதற்ககோசரமாம் சொரூபமே.* (அ)

*மனதுமுதற்கெட்டாத வத்துவாகி.* (கூ)

பகவத்கீதைசாங்கியயோகமுரைத்த அத்தியாயம்,

*புலன்கள் பதினுலும் அறியாஅறிவை.* (உஎ)

ஷை அக்ஷரயோகமுரைத்த அத்தியாயம்.

*யார்க்கும் நினைத்தற் கரியானை.* (அ)

ஷை மாயாவிகார அத்தியாயம்.

*காலத்தாலும் பொருளிடத்துங் கணித்தற்கரிதாகிய என்னை.* (கக)

ஷை பத்தியோக அத்தியாயம்.

தூயநான்மறைக்குமெட்டாப் பொருளையே தொடர்கிற்பாரோ. (க)

பெரியபுராணம் தடுத்தாட்கொண்ட புராணம்.

அருமறை முறையிட்டின்னும் அறிவதற்கரியான். (கசு)

நக்கீரர் கோபப்பிரசாதம்.

வாக்குமனமுமிறந்தமறையனை, இனையதன்மையனென் றறிவரியவன்.

திருக்கோவையார்.

அளவியை யார்க்குமறிவரியோன். (க0)

திருஞானசம்பந்த சுவாமிகள் திருவீழிமிழலை.

காணுமாறறிய பெருமானாகி. (ரு)

ஷை திருப்பல்லவனீச்சரம்.

எங்குமாயிருப்பார் இவர்தன்மை யறிவாரார். (எ)

ஷை திருக்கொடுங்குன்றம்.

மறையுமவை யுடையானென நெடியானெனவிவர்கள்
இறையும்மறிவொண்ணாதவன்மேய வெழில்நகரே. (சு)

ஷை திருநரையூர்ச்சித்தீச்சரம்.

தம்பெருமை யளத்தற்கரியான். (ரு)

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவினாத்திருத்தாண்டகம்.

இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன்
இறைவனென்றெழுதிக் காட்டொணாதே.

ஷை தனித்திருத் தாண்டகம்.

நால்வேதத் தப்பால்நின்ற, சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்துநின்ற
சொலற்கரிய சூழலாய்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திரு எதிர்கொள்பாடி.

சுருதியார்க்கும் சொல்லவொண்ணாச்சோதி. (க0)

ஷைதிருப்பழமண்ணிப்படிக்கரை.

காண்பரிதாயபிரான் (க)

ஷை திருநனிபள்ளி.

மனத்தாலும் நினைப்பரியான். (ரு)

திருவாசகம்.

சொற்பதங்கடந்த தொல்லோன்காண்க.

சித்தமுஞ்செல்லாச் சேட்சியன்காண்க.

நாலுணர்வுணரா நுண்ணியோன்காண்க.

ஒற்றுமைகொண்டு நோக்குமுள்ளத்
துற்றவர்வருந்த வுறைப்பவர்க்கொளித்தும்
மறைத்திறம்நோக்கி வருந்தினர்க்கொளித்தும்
இத்தந்திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந்திரத்தினவ்வயினொளித்தும்.

உருமூன் றுமாகி யுணர்வரிதா மொருவனுமே.
உரையுணர்விறந்து நின் றுணர்வதோருணர்வே.

யாருன்னை யறியகிற்பாரோ.
சொல்லுதற்குரிய ஆதியே.
மனவாசகங் கடந்தான்.

கருவூர்த்தேவர் திருவிசைப்பா.

மறைகளுந்தேட வரியரோ.

திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா.

மறைகளுமமரர் கூட்டமுமாட்டாதயன் திருமாலொடேயங்ஙி
முறைமுறைமுறையிட்டோர் வரியாயை.

திருமந்திரம்.

வேதாகமத்தால்விளங்கும் பொருளல்ல.

ஷை நவதண்டம்.

அந்தமில்லானை அளப்பவர்தாமில்லை.

ஷை ஆதாரம் ஆதேயம்.

வாயுமனமுங் கடந்த மனோன்மனி
ஆயுமறிவுங் கடந்தவரனுக்கு.

ஷை ஆதித்தநிலை அண்டாதீத்தன்.

யாருக்குங்காண வொண்ணுதவரும் பொருள்.

திருவாய்மொழி முதற்பத்து முதற்பதிகம்.

மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்.
உதெனநினைவரியவன்
நினைவரியவர்.

ஷை 9-வது பதிகம்.

சிந்தைக்குங் கோசரமல்லன்

---

நின்றவொன்றையுணர்ந்தேனுக் கதனுணோர்மையதுவிதுவென்
றென்றுமொருவர்க்குணரலாகா துணர்ந்துமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபரம்பரமா யாதுமின்றித்தேய்ந்தற்று
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானங்கடந்ததே.

பிரபுலிங்கலீலை.

பரசிவம்பிரமமென்னப்பட்டொருதிரிபுமின்றி
உரைமனமிறந்துநின்ற வொருசிவலிங்கம்.

அவிரோதவுந்தியார்.

நானற்றபோதத்தே நானனமுத்தியை
நானெங்ஙனஞ்சொல்வதுந்தீபற
நான்மறைக்கெட்டாதென்றுந்தீபற

பட்டணத்தார் திருக்கழுமலமும்மணிக்கோவை.

ஆரணநான்கிற்கும் அப்பாலவன். (ரு)

ஷை திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.

ஆரணந்தொடராப்பூரணபுராண. (சு)

சுருதியுந்தொடராச் சுருதிநாயக. (எ)

கைவல்லியம் சந்தேகந் தெளிதற்படலம்.

ஆகமப்பிரமாணத்தா லறியென்றும் வாக்குக்கெட்டா
தேகமாம் பிரமமென்றும் இதயத்தா லுணர்வாயென்றும்
சோகமாமனத்திற் கெட்டாச் சுயஞ்சோதி யென்றுஞ் சொன்னீர்
மோகமாமிரண்டு சங்கை முளைத்தன பறித்திடீரோ. (சு)

மற்றைமுப் பிரமாணத்தால் வத்துநிர்ணயங் கூடாதே
உற்றதோர் விடயம்பூத முபயமன் றுதலாலே
குற்றமாங்குணவிசேடங் கூடாமலிருக்கை யாலே
இற்றதுவாக்குக் கெட்டாதென்பது மறிவாய் நீயே. (எ)

வாக்கியந்தனக் கெட்டாது வத்துவென் றுரைத்தவேதம்
வாக்கிய விருத்தியா லவ்வத்துவைக் காட்டிற்றன்றோ
வாக்கியங்களிலே மானமாவதே தென்பாயாகில்
வாக்கிய மிரண்டுமெய்யேமறைகள் பொய்யாது கேளாய். (அ)

தன்பதியல்லாப் பேர்கடமையல்ல னல்லனென்றாள்
அன்பனைக்கேட்ட நேரமவள்வெட்கி மௌனமானாள்
என்பதுபோலநீக்கி யிதன்றிதன் றெனச்சேடித்த
பின்பரப் பிரமந்தன்னைப் பேசாமற் காட்டும்வேதம். (கூ)

சிவாகமார்த்த தரிசனம்.

பன்னுமெந்நூல்களாலும் பகருமெவ்வளவையாலு
மன்னுமிப்பொருளதென்கை வாசகஞானமாகு
முன்னுமவ்வுணர் விறந்தவுலப்பில் பேரின்ப வெள்ளந்
தன்னனுபோகத் தான்றனிற் காண்பதொன்றே.

மெய்ம்மொழிச்சரிதை.

மறைநான்கினுக்குமெட்டாத, வெந்தையெனவே சோகஞ்செய்திருத்தல் இறைபூசனையாமே.

மெய்ம்மொழி.

அளவைக்கெட்டா விராமயன் மாயாதீதனென்றுகொள்சிவமதன்றே

ஞானமிர்தம்.

காட்சிமுதலிய அளவையு மளவறச்சேட்ப வகன்றனனச் சிவனென

அனுபூதிநிலயம்.

மறைகளீறு வாசாமகோசரமென.

சிவஞானவள்ளலார் பசுபதிபாசவிளக்கத்தில்

பதிவிளக்கம்.

சொல்லாலுமனதாலுந் தொடராத சூக்குமம். (உ)

அறிவானந்தசித்தியார்.

மனவாக்குக்காயம் வருத்தலின்றி. (௬௦௦)

வாக்குமனத்துக்குமெட்டாத வின்பவடிவீறுதி. (௬௧௫)

தோன்றி.

போக்கற்றதுவரவற்றது புரையற்றதுவரையற்றது
வாக்கற்றதுமனமற்றது வடிவற்றதுபடியற்றது
நோக்கற்றதுநுணுக்கப்படு பொருள்மற்றொருபொருளின்
ருக்கற்றது தனையற்றது எது மெய்ப்பொருளது தற்பரம்.

நடராசநிலயம்.

சுருதிபுராண மிருதிதொல்லாகமம் சூழலெல்லாம்
கருதியுன் மேனியைக் கண்டறியாது.

தாயுமானூர்.

விண்ணவர்மாமுனிவர் சித்தராதியானோர் தெரிவரிய பூரணமாய்.
வாக்குமனமணுகாத பூரணப்பொருள்.
அளவைக்கெட்டாத் தனந்தனிச்சின் மாத்திரமாய்.
அருமறையின்னமுங் காணுதரற்ற.
சொல்லாலும்பொருளாலும் அளவையாலும் தொடர
வொண்ணு அருணெறியை.
அத்துவிதஅனுபவத்தை யனந்தமறை யின்னம் இன்னம்
அறியேமென்னும், நித்தியத்தை.

சுருதியே சிவாகமங்களே யுங்களாற்சொல்லு
மொருதனிப்பொருளளவை யீதென்னவாயுண்டோ
பொருதிரைக் கடலுள்மணலெண்ணினும் புகலக்
கருதவெட்டிடா திறைபொருளளவையார் காண்பார்.

---

முத்தியில் ஜீவனிறந்து பிரமம் அல்லது சிவமொன்றே விளங்கு மென்பதற்குப் பிரமாணங்கள் வருமாறு :—

கைவலியோப நிஷத்.

சூட்சுமத்திலும் அதிசூட்சுமமாயும் நித்தியமாயும் இருக்கிற பரப்ரம்மம் எதுவோ அதுநீ; நீயேஅது......சாக்ஷியாயும் சின்மாத்திரமாயு மிருக்கிற சதாசிவன் நான்.

அமிர்தபிந்தூப நிஷத்.

அந்த ப்ரம்மமே நானென்றறிந்தால் ப்ரம்மமே யாகிறான் நிச்சயம்.

மைத்திரே யோபநிஷத் 2-வது அத்தியாயம்.

தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகின்றது. அதிலிருக்கிற ஜீவனுனவன் சிவனே. அஞ்ஞானமான நிர்ம்மாலியத்தைத்தள்ளி (ஸோமம்) "அவன் நான்" என்கிற பாவனையினுலே பூஜிக்கவேண்டியது.

ஷை ௩-வது அத்தியாயம்.

நித்தியனுயும் சுத்தனுயும் சதாசிவனுயுமிருக்கிறேன்......அவன் நானுக இருக்கிறேன்......பரமாத்துமாவாயுஞ் சிவனுயுமிருக்கிறேன்......நாச மற்ற பிரமமாயிருக்கிறேன்.

### ஸ்கந்தோப நிஷத்.

அவனே ப்ரம்மம்; அந்தப்ரம்மம் நான்தான். சமுசயமில்லை. ஜீவனே சிவன்; சிவனே ஜீவன். அந்தஜீவன் சிவனேதான், உமியினால் கட்டுப்பட்டிருக்கிறபோது நெல்லாயிருக்கிறது. உமியற்றதானால் அரிசியாயிருக்கிறது. அப்படித்தான் ஜீவனுங் கட்டுப்பட்டிருக்கிறான். கருமம் நாசமானால் எப்போதும் (மங்கள சொரூபியாகிய) சிவனாயிருக்கிறான். (கரும) பாசத்தினால் கட்டுப்பட்டிருக்கிறவரையில் ஜீவனாயிருக்கிறான், பாசத்திலிருந்து விடுபட்டால் அப்போது சிவனாயிருக்கிறான். அவன் (அந்தச்சிவன்) "நானே" யென்கிற பாவனையுடன் பூசிக்கவேண்டியது. அபேதமாய்ப் பார்க்கிறதே ஞானம்.

### ஆத்ம போதோப நிஷத்.

நான் ப்ரம்மத்தைவிட வேறல்லாத வுத்தமன்.

### பைங்களோப நிஷத் 4 - வது அத்தியாயம்.

நானே ப்ரம்மம் என்றறியாதவனுக்கு முத்தியுண்டாகிற தில்லை.

### சூதசங்கிதை கால அளவை யுரைத்த அத்தியாயம்.

மன்னிய ஆன்மாக்களெங்குஞ் சிவசொரூப மென்றே மதித்திடார் மாயை யான் மறைப்புண்டு நானீ, யென்னமிகு பேதமே குறித்துழல்வர். (கரு)

### ஷை சமாதிவிதி யுரைத்த அத்தியாயம்.

மேவருமறைகளத்து விதமெண விளம்புமச்சொற்
றூவரும்பொருள்வே றன்மைதானென வுரைப்பரற்றாற்
சீவர்கள்பலருந்தானாய் நிற்பனந்தேவதேவன்
பாவனை துவிதங்கொள்ளிற் பவமொழியாதுநாளும் (ரூ)

### ஷை முத்திநிலை யுரைத்த அத்தியாயம்.

இத்தகுமுத்திவேறு யாம்வே றென்றெண்ணங் கொள்ளேல்
உத்தமமறையபேத முணர்த்திடு மஃதேயுண்மை. (ரூக)

### ஷை பஞ்சாக்கர மந்திர முரைத்த அத்தியாயம்.

மாயையாற்பேத நடையராகி, யியங்குறு சீவர்கள் சிவனோடபேத பாவனை செய்வதென்பர் தக்கோர். (கூ)

### ஷை வேதாவிரோத முரைத்த அத்தியாயம்.

ஆதலினாற்சத்திய அத்துவித பரமாகிய ஆரணத்தினுக்குங்
காதலில்கற்பித துவித பரமானமறையினுக்குங் காணுங்காலை
ஓதுபிரதீதியினால் விரோதமே யுளதாகத் தோன்றினாலும்
மேதகுபரமார்த்தத் தவிரோதமென் றுணர்வீர்மேன்மைமிக்கீர். (ரு)

அவ்வேதம், துவிதத்தை அனுவாதமுன்செய் தத்துவிதமே சொல்லுமீற்றில். (எ)

### கூர்மபுராணம்

இந்திரத்துய்ம்மன் முத்திபெற்ற அத்தியாயம்.

சீவான்மாவினைப் பரமான்மாத்தன்னொடும் பிறிதறவொடுக்கி (சஉ)

வேறின்றி, யழுங்கலில் சிவமாந்தன்னுருத்தானுயமர்ந்துயரின்பமுற்ற
துவே. (சஎ)

**ஷை சாங்கிய யோக முரைத்த அத்தியாயம்.**

பிரமம் யானேயென மறைவிளம்புமன்றே. (உகூ)

**வாயுசங்கிதை**

**ஞான நிலைமை யுரைத்த அத்தியாயம்.**

ஆன்மாவை, முறையிலந்த மாயைதான் மூடுமெல்மாயைகெட, வுறைவது
வே சிவமென்ன வுரைப்பராலென வுரைத்தான். (சo)

மலமாயும் வீந்ததற்பின், ஓவலில் அப்புருடனே சிவனென்ன வுறை
வன் (சஅ)

**ஷை பரசிவப்பிரபாவ முரைத்த அத்தியாயம்.**

சிவனை, மருளின்முகியே யுணரின்மன்னு பசுத்வமொடு பாசம்
ஒருவமழுவாளேந்து சிவனுருவாய்ப்பொருந்துமென்றுரைத்தான். (கரு)

**பிரமகீதை**

**கைவல்லிய உபநிடதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்.**

அந்தப்பிரமமே அவன்முன் அறியாமையினுல் அப்பானைப்
பந்தப்படுமோர் சீவனெனப்பார்ப்பார் பவத்தேபதைக்கின்முர். (கக)

**ஷை கடவல்லி சுவேதாசுவர வுபநிடதங்களின் அர்த்தமுரைக்கும் அத்தியாயம்.**

உண்பவன் சீவன் ஊட்டுவான் சிவன் இவர் தமக்கிங்
காயபேதந்தானுபாதியால் வந்ததல்ல தபேதமேயாகும். (கூ)

**ஷை சாந்தோக்கிய உபநிடதத்தினுறமத்தியாயத்தின் அர்த்தத்தை யுரைக்கும் அத்தியாயம்.**

நீ யென்கின்ற வார்த்தைக்குப்பொருளாயென்றுநிற்பதுவே
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய் நின்று நாடுவது
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய் நாடிநிற்பதுவே
நீ யென்கின்ற வாசகத்தினிற்கும் பொருளு நிலைபெறவே. (ருகூ)

அது நீயெனும் வாய்மொழியா மதனுலறியும்படிசொன்ன திவ்வாரணமே.ருஎ

**ஷை முண்டகோப உபநிடதார்த்த முரைக்கும் அத்தியாயம்.**

இந்தவுடம்புறை சீவப்ரங்களெனப்படும் அன்னமிரண்
டந்த விரண்டினுமொன்று வினைப்பயனங்கு நுகர்ந்திடுமோம்
தொந்தமறும்பர மொன்றுமுணுது சொலப்படு பேதமில்வான்
வந்த கடத்திலகப்படு பேத மெனப்படு மாயையினுல். (உரு)

தற்பரனுருவஞ் சித்தே தற்பரனிடையேயக்
கற்பித சீவன்தானு மதானக்காலந்தச்
சிற்பொரு ளொன்றேவேறெனின் மற்றது சித்தாமோ
அற்பமும் வேருகா து சித்தாகாரத்தாலே (உகூ)

பரசீவர் பின்னமொனிற் போதத்தொரு பேதம் பிறவாதே (உஎ)

மறையாலு மிருதிசொலும் வழியாலும் வருவதல
இறையார் தமருளில் வருவது ஏகமெனுமுணர்வு. (உஅ)

சீவனும் பரமுஞ் சின்மயமாகு மாதலாலொப்பெனச் செப்பல்
மேவியொன்ருகி விடுதலே யன்றி வேறுவேருகுமோ வீடு. (கூக)

சீவன் தன்னுருவான சிவத்தை. (௬௭)

ஈஸ்வரகீதை சாங்கியயோக அத்தியாயம்.

இந்தஞானத்தை யெய்திய இன்பத்தால்
அந்தமில் பிரமத்துருவாயினோர். (ரு)

ஷை தத்துவ தரிசன அத்தியாயம்.

பரமவொளியாம் பரம்பரனை, ஞானந்தன்னல் வேறறவே நானென்றறிந்தநல்லோன். (கக)

சூதகீதை பரம விஞ்ஞான முணாத்த அத்தியாயம்.

முன்னும் அவித்தையாற் பசுபேதமும் மொய்வலிய மாயையாற், பன்னு பரதத்துவ பேதமுங் கற்பிக்கப்பட்டது. (கூ)

ஷை ஆன்ம அநான்ம விவேக முணாத்த அத்தியாயம்.

அக்குருகடாட்சமும் சிவப்பிரசாதத்தாலே யமையமேவு
நக்கசத்துச்சீவன்முதலானதெல்லாம் சிவமென்னுஞானந்தானே
தக்கசிவப்பிரசாதமாகுமந்த ஞானமுள்ளதலைமையோனே
மிக்கசிவஞானியாவானென்று நான்மறையும்விள்ளுமாலோ. (உரு)

ரிபுகீதை 1-ம் அத்தியாயம்.

சத்தியமாம் அச்சிவமே நாமேயென்றும் சலனமில்லா அகண்டசிவஞானம்பெற்று, மித்தையதாம் பவபந்தமனைத்துநீக்கி மெய்யுணர்வாநந்த பரசிவமேயாவர். (அரு)

ஷை 15-அத்தியாயம்.

ஆன்மாவே துரிய பரசொரூப மாகும். (ரு0)

ஷை 17-ம் அத்தியாயம்.

அதுநானென்னும் பின்னமில்லாப் போதத்தாற் பிரமமாவாய். (உக)

ஷை 18-ம் அத்தியாயம்.

சகசீவபரங்க ளெல்லாம் பிரமரூபம். (௪ரு)

ஷை 21-ம் அத்தியாயம்.

நித்தமுமே யகண்டபர சிவன்நானென்றே நினைப்பதுவாம் சிவபத்தி சின்மயமாம் பரமசிவந் தானேயாகி. (௪௭)

பாரதம் பகவற்கீதை கூ-வது யோக அத்தியாயம்.

யாதொன்றிந்தப் புலனறியா வளவிலின்பமாயிருக்கும்
யாதொன்றினைச்சென்றடைந்தோர்கள்பின்னையதனிலிரண்டாகார். (ககூ)

ஷை 18-வது சந்சேபஅத்தியாயம்.

சாந்திபெறவே யோரிடத்தும், பின்னமடையா தொன்ருகின்ற பொருளின் பேருருவாம், (௪௫)

**பாரதம் உத்தரகீதை 2-வது அத்தியாயம்.**

அம்ஸோகமென்கிற அஜபாமந்திர சொரூபத்திலே, "நானே அவன்," "அவனே நான்" என்று அன்னியோன்னியக் கூட்டுறவு சொல்லுகின்றமையால் அச்சித்தவிருத்தி நிரோதமான யோகத்தினாலே இகமுத்திரார்த்த பலபோகவிரத்தனான யோகீசுவரனுடைய பாவனாத்தியானமே பிரமமென்று சொல்லப்படும். (௯)

நானே பிரமமென்று ஏகாக்கிரமனதுடனேகூடி எவன் க்ஷணமாத்திரமானாலும் தியானம் பண்ணிவருகிறானோ அவன் சகல பாவங்களிலிருந்தும் விடுபட்டுக் கிருதார்த்தனாவான். (௯௧)

எவனானாலென்ன? வேதசாஸ்திரங்கள் நன்றாய்ப் படித்திருந்தும் நானே பிரமமென்று அறியாதேபோனால் அவனுக்குப் படித்தபிரயாசைமாத்திரமே பலன். (௪௧)

**ஷை 3-வது அத்தியாயம்.**

ஆரூடஞானி அணிமாதியோக சித்தியை யபேக்ஷியாமல் பிரமமாகவேயிருப்பன். (௧௦)

தானே பிரம்மசொரூபமாய். (௧௧)

நானே பிரமமென்றெப்போது எவனறிகிறானோ. (௧௨)

ஆரியப்புலவர்

**பாகவதம் ௯-வது கந்தம்**

**கபிலா தத்துவ முரைத்த அத்தியாயம்.**

ஆவிவேறெனப் பேதமடைந்திடும்
தேவர் மாதவர் தேர்சனகாதியர்
பூவினானெடும் போயடைந்தன்னவன்
மேவுஞான்றிவண்மீட்டுமுதிப்பரால். (௫௬)

காதல்விட்டுக் கருதியபேதமாம்
ஏதநீங்கினர் எய்துவர்முத்தியின்
பேதமாகுமுபாசனை பெற்றிடின்
வேதனாயினும்மீளவும்தோற்றுமால் (௫௫)

மோகநீங்கிமுயல்வுறின்மாதவம்
ஆகமொன்றுதலின்றியபேதமாய்
மாகநாடர்வழுத்தவருசித்தோ
டேகமாகியியைகுதி நீயென்றான். (௫௬)

**ஷை ௧௨-ம் கந்தம் பரீக்ஷித்து வீடுபேற்ற அத்தியாயம்.**

கடத்துறைவானுமக் கடமுடைக்கின்வான்
இடத்தொடு மொன்றுபட்டிருக்குமாறுபோல்
சடத்துறையுயிரு மச்சடந்தணக்கினீங்
கடக்கரும்பரத்தி னொன்றாகிவைகுமே.

**திருவிளையாடற்புராணம் நாரைக்கு முத்திகொடுத்தபடலம்.**

சித்தமாசுகழீ இச்சிவமாயினர். (௯)

ஸ்ரீ விஷ்ணுபுராணம் முதலமிசம் பிரகலாதர் ஸ்தோத்திரஞ் செய்தது.

நானும் அவனாகவேயிருக்கிறேன்,

ஞானவாசிட்டம் ஞானவின்மகன்கதை.

அயனொடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனுமருக்கன்முனும்
வியனிலுபசாந்தராம் வேலையினிலுபாதியெலாம் விட்டு நீங்கிப்
பயனில் சகமென்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரமரூபந்
துயர்விகற்ப மிலாவடிவாய் எங்கும்நிறை சிவமாகி யொன்றாய் நிற்கும். (சச)

ஷை கற்கடிகதை.

பிரமத்தொளிதானே முடிவில் பரமாகியசிவன். (உ)

ஷை நிருவாணப்பிரகரணம்.

மனமாகினவே சங்கற்பம் மனத்தினினை வற்றதுசிவமே. (ருஎ)

ஷை உற்பத்திப் பிரகரணம்.

ஏகமாய் வடிவின்றிப் பிறப்பிறப்பிலாப்பிரம மிலங்கு மொய்தாய். (எக)

ஷை சிகித்துவசன்கதை.

தேற்றுகின்ற விவ்வகையாலறிந்தே நன்றாய்ச்சிவமானேன்
வேறொன்றுந் தெரியக்காணேன். (ஙருக)

ஞானவாசிட்டம் பிரகலாதன்கதை.

நானே நீயாய் நீ நானாய் ஞானவடிவாய் முடிவின்றித்
தானேயாகியண்டத்தின்றலையாய்ப் பரமதத்துவமாங், கோனே (கூஅ)

ஷை சனகராசன்கதை.

பிரமம் நாமதுவேயென்றெண்ணி. (உ)

சிவஞானபோதம்.

அவனேதானேயாகியவந்நெறி
யேகனாகி யிறைபணிநிற்க
மலமாயைதன்னொடு வல்வினையின்றே.

தேவிகாலோத்தரம்.

இப்படியே பாவித்துச் சலியாதான் யாவனவன்
அப்பிரம மாதலாலமுதமாய்மழகியாய் (சஎ)

அறிவாகிச்சுத்தனாயறிவானாய்வேறாகிக்
குறியாது கொளல் வீடு கூடாது கூறுங்கால்
அறிவார்தாமிலராகிச் சோகாதியடையானாய்ப்
பிறியாத பரப்பிரமமென நிற்பன்பெண்ணணங்கே. (ச0)

தேவாரம்.

பாஞ்சபூதிகத்துண்ணின்றபண்பனை
ஆய்ந்தாய்ந்து அறிவாலறிந்தபின்
தேய்ந்துதேய்ந்துசிவமல்லதில்லையென்
றோய்ந்துபோன தென்னுள்ளமுமெள்ளவே.

திருவாசகம்.

சிவமேபெறுந்திருவெய்திற்றிலேன்.

பேசினேனோர் பேதமின்மை.
நாமொழிந்துசிவமானவாபாடி.
வான்கெட்டுமாருதமாய்ந்தழனீர்மண்கெடினும்
தான்கெட்டலின்றிச்சலிப்பறியாத்தன்மையனுக்
கூன்கெட்டுயிர்கெட்டுணர்வுகெட்டென்னுள்ளமும்போய்
நான்கெட்டவாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ.
பேதமில்லதோர் கற்பளித்த பெருந்துறைப் பெருவெள்ளமே.
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி.
பேதங்கெடுத்தருள்செய்பெருமை
யறியவல்லார் எம்பெருமானுவாரே.
உயிருண்கின்றஎம்மானே.
சித்தமலமறுவித்துச்சிவமாக்கி.

திருமந்திரம் கடுஞ்சுத்தசைவம்.

நானென்றுந் தானென்று நாடிநான்சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவநல்கலாற்
றானென்று நானென்றுஞ் சாற்றகில்லேனே. (௪)

ஷை சம்பிரதாயம்.

நானெனை நீயென வேறில்லை. (௰௧)

அவனும் அவனும் அவனையறியார்
அவனையறியில் அறிவானுமில்லை
அவனும் அவனும் அவனையறியில
அவனும் அவனும் அவனிவனுமே. (௰௨)

ஷை உடலிற்பஞ்சபேதம்.

தானவனாகிய தற்பரம். (௧௬)

ஷை பராவத்தை.

இவனும் அவன் வடிவாமே. (௬)

ஷை நின்மலாவத்தை.

தானே சிவமான தன்மைதலைப்பட (௰௧)

தன்னையறிவதறிவாமஃதன்றிப்
பின்னையறிவது பேயறிவாமே. (௰௫)

தானவனாகும் சமாதிகை கூடினல். (௰௯)

தானவனாகிய ஞானத்தலைவனை. (௨௧)

ஷை முப்பதம்.

தொம்பதம்தற்பதந் தோன்றுமசிபதம்
நம்பிய சீவன்பரஞ் சிவனாய் நிற்கும். (௫)

ஷை முச்சூனியம் தோந்தந்தசி.

சீவன் பரசிவனாமே. (௯)

ஷை தத்துவமசிவாக்கியம்.

ஆகிய அச்சோயந் தேவதத்தன்னிடத்
தாகியவிட்டு விடாத இலக்கணைந்
தாருபசாந்தமே தொந்தத்தசியென்ப. (௬)

தொம்பதந் தற்பதஞ் சொல்லுமசிபத
நம்பிய முத்துரியத்துமேனுடவே
யும்பத முப்பதமாகு முயிர்பரன்
செம்பொருளான சிவமெனலாமே (ரு)

ஷை மகாவாக்கியம்.

நீயதுவானுயென நின்ற பேருணை
யாயது நானுனேனென்னச் சமைந்தறச்
சேயசிவமாக்குஞ் சீர்நந்திபேரருள்
ஆய துவாயனந்தா னந்தியாகுமே. (க)

ஷை ஞானகுருதரிசனம்.

திரிமலந்தீர்ந்து சிவனவனுமே. (உ)

ஷை ஞானேதயம்.

நானென்றுந்தானென்று நாடினேனுடனு
நானென்றுந் தானென்றிரண்டில்லை. (அ)

ஷை சிவதேரிசனம்.

சிந்தையதென்னச் சிவனென்னவேறில்லை. (க)
(சிந்தையென்பது ஆத்துமா)

ஷை சிவரூபதெரிசனம்.

உணர்வுமவனே யுயிருமவனே. (உ)

ஷை அணைந்தோர்தன்மை.

சித்தஞ்சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்த சிவமாவர் தோயார்மலபந்தம். (மரு)

ஷை தோத்திரம்.

சிவன்முன் பலபல சீவனுமாகி
நவின்றுனுலகுறு நம்பனுமாமே. (ரும)

திருமந்திரம்.

தன்னையறியாதுடலைமுன்முனென்முன்
தன்னைமுன்கண்டான் றுரியன்றனைக்கண்டான்
றுன்னுதுரியமுமீசனேடொன்முக்கால்
பின்னையும்வந்து பிறந்திடுந்தானே.

ஆகம வாக்கியம்.

பாசபத்ததேஜீவா பாசமுத்ததே சதாசிவா.
சிவஜ்ஜீவோ ஜீவோசிவ சற்ஜீவோ கேவலசிவா.
ஜீவோசிவோ சிவோஜீவா சற்ஜீவோ கேவலசிவா.
திஷ்டே பூர்வம் ஆத்மா ஏகமேவா.
சரீரபின்னம் பரமாத்மனேகம்.
சர்வசாக்ஷி சிவோகம்.
பிரத்யேகாத்ம சிவோகம்.

### கந்தரலங்காரம்.

வரையற்றவுணர்சிரமற்றுவாரிதிவற்றச்செற்ற
புரையற்றவேலவன்போதித்தவாபஞ்சபூதமுமற்
றுரையற்றுணர்வற்றுடலற்றுயிரற்றுபாயமற்றுக்
கரையற்றிருளற்றெனதற்றிருக்குமக்காட்சியதே. (௬௧)

### கந்தரனுபூதி.

ஆனாவமுதே யயில்வேலரசே
ஞானாகரனே நவிலத்தகுமோ
யானாகிய என்னை விழுங்கிவெறுந்
தானாய் நிலைநின்றது தற்பரமே.

வானேபுனல் பார்கனன் மாருதமோ
ஞானோதயமோ நவிஞன்மறையோ
யானேமனமோ எனையாண்டவிடந்
தானேபொருளாவது சண்முகனே.

### சௌந்தரி அலகரி.

தாமாகநினைவோர் தவமிறுகத்தனமிறுதி
மாமோகப்புன் முறுவல் மனங்கவரக்கடைவிழியால்.

### சிவவாக்கியர்பாடல்.

உருக்கலந்துநின்றபோது நீயும் நானும் ஒன்றலோ.

என்னகத்துளென்னையன்றி யாதுமொன்றுமில்லையே.

அவனும் நானும் மெய்ம்முயங்கி அனுபவிக்குமளவிலே
அவனுமில்லை நானுமில்லை யாருமில்லையானதே.

### பிரபுலிங்க லீலை.

பூதநீயலை பொறிகளு மலையலைபுந்தி
ஏதுநீயலை யிவற்றினை மயங்கி யானென்னும்
போதநீயலை யென்றிவை யனைத்தும் போக்கிச்
சோதியாகிய பிர்மமே நீயெனச்சொல்லி.

ஞேயஞான ஞாதரு வெனுமிவை பலநிற்கு
மாயின்வேறறு முத்தியன்று அதுசகமாமென்
றேயுமாறிது அதுவெனுஞ் சுட்டலாவியல்பை
மாயைமாறிய தேவிபாலருளினன் வள்ளல்.

### வள்ளலார்சாத்திரம்.

பதிபசுபாச விளக்கத்தில் பதிவிளக்கம்.

செம்புயிராகுமந்தச் செம்பினிற் களிம்புபாசம்
செம்பினிற் களிம்புபோனால் செம்பொனாமாறுபோல
நம்பனார் ஞானத்தாலே நானெனுமலம்போம்போனால்
நம்பனாராவனென்று நான்மறைசொல்லுமன்றே. (௭௨)

ஷை அதிவன்னச்சிரமியிலக்கணம்.

பாம்பிதென்றுணர்ந்தபோது பழுதையேயில்லைவெய்ய
பாம்பிதன்றென வுணர்ந்தால் பழுதையே யானாற்போலச்
சோம்புறு குறும்பியென்னிற் றுகளுறு சீவனாகும்
சோம்புறுக்குறும்பி யென்னிற்றுகளறு பிரமமாவான். (௬)

ஷை மகாவாக்கிய விலக்கணம்.

என்று மிருந்தபடியிருக்கு மியல்பேயென்னு மொருவேதம்
ஒன்றேயொழிய விரண்டாம்வத்தில்லை யென்னுமொருவேதம்
வென்றிப்பரமும் நீயும் வேறில்லை யென்னுமொரு வேதம்.
துன்றுமதுவே நீயாணுயென்றே சொல்லு மொருவேதம். (௰உ)

ஷை பாசமோசனவியல் (குறள்)

சீவனத்தாற் சீவனெனல் சீவமிறந்தாலிந்தச்
சீவனே யந்தச்சிவம். (௬உ)

ஊனையொதுக்கி யுணர்வாக்கி விட்டபினர்
நானே பிரமமெனநாடு. (௬௩)

உள்ளமசையாதுயர் துருவன் போனிற்கில்
வள்ளலுருவானுய் மதி. (௬௯)

ஷை தசகாரிய வுபதேசம் சிவபோகம்.

நானே சிவன் சிவனே நானென்று நாடிவெறுந்
தானுகின்ற நிலைதானன்றே. (உரு)

ஷை ஞானவிளக்கம்.

சுத்தசிவம் நீயென்று சொல்லினன். (௬)

ஷை அத்துவிதக்கலிவெண்பா.

ஈசன்வேறியான் வேறென்றெண்ணுகின்றபாதகனை
நீசனெனக்கண்டு நினையென்றான். (உஉ)

ஷை கர்நாமிர்தம்.

சைவசித்தாந்த மெல்லாம் தானவனுகிநிற்றல்
மையறுவேத சித்தமற்றது நானேயென்னல்
உய்வகைக்கிரண்டு மொன்றென்றோதி யென்னுயிர்க்கிலாபஞ்
செய்த சற்குரவனீயே திருப்புலி வனத்துளானே. (௬௩)

ஷை சிந்தனைவெண்பா.

அதுவே நீயாமென்றரு மறைகள் சொல்லும்
எதிர்சிவனே நீயாணுயென்னு—முது சைவம்
வேறேவேறன்றே சொல்வேதியனே விண்விசும்பும்
வேறேவேறன்றே விளம்பு. (௰௩)

ஷை பழமொழியுபதேசம்.

முப்பாழும் பாழென்றறைந்தார் திருமூலர்
அப்பாழும் பாழென்றறைந்தார் சடகோபர். (௪௬)

ஷை நிராமய அந்தாதி.

மெய்யைப்பொய்யென்றான் வெளியைநல்லவீடென்றான்
சைவத்துறைகாழிச் சம்பந்தன் - ஐயமற
நின்போதம்போமிடத்தே நீயேசிவமென்றான்
என்போதத்துள்ளேயிருந்து. (௬)

உற்றுணரினீயே யுயர்பிரமமென்பதுவும்
மற்ற சிவன்றானுய் வகுப்பதுவும் - முற்றும்
இறந்தவிடத்திரண்டுமேகமேயென்றான்
சிறந்த சீகாழிவருவதே. (௭)

### அஞ்ஞான நிவர்த்தி.

ஊனிறந்துயிரிறந் துணர்விறந்துளமிறந்து
தானுயர்பரமிறந்து தகுமன முதலிறந்து
வான்முதல் முழுதிறந்து வளரொளியாகின்ற
தானிறந்திருந்த வின்பந்தனை யுரைசெய்யலாமே.

### குமாரதேவர் விருத்தாம்பிகைதுதி.

விரிவுறுமுருவ நாமமதகற்றின் விடயங்கள் விளங்குருவதனுன் (ஞல்
மருவுறு பொறிபோம் பொறியறக்கரணமாய்ந்திடுங் கரணமாய்தலி
புருடன் முன்னேழுஞ் சுத்தமோரைந்தும் போமிதாற்சச்சிதானந்தங்
கிரியையற்றிலங்குமென்றனள் விருத்தகிரியமர்பெரியநாயகியே.

### குமாரதேவர் சாஸ்திரம் அத்துவிதவுண்மை.

தன்னைச்சீவனெனத் திரிவாய்த்தானின்றுணர்தலஞ்ஞானம்
தன்னைப்பிரமமெனத் துணிவாய்த்தானின்றுணர்தலே ஞானம். (எஅ)

### ஷை பிரமானுபவ அகவல்.

நானுரெனவே ஞானநற்குருவை
வினவிடிவித்தகை விளங்கிய பிரமம்
நீயேயென்று நிச்சயமாக
தத்துவமசிகொடு சாற்றினனன்றே.

### சிவநெறிப்பிரகாசம்.

ஞானமுடன் ஞேய ஞாதுருவென்று மூன்றுநாடாமல்
தானதுவாய் நண்ணியிடலுனே—யூனமிலா
உன்மனைக்கு மேலான முத்தியுற்றது
நின்மலதுரியா தீதமெனவுரைப்பர்.

### அவிரோதவுந்தியார்.

நானற்றபோதத்தேநானுனமுத்தியை
நானெங்ஙனஞ்சொல்வதுந்தீபற
நான்மறைக்கெட்டாதென்றுந்தீபற (சுஎ)

### கைவல்லியம் தத்துவ விளக்கம்.

தன்னையுந்தனக்காதாரத்தலை வனையுங்கண்டானேல்
பின்னையத்தலைவன்றுனைப் பிரமமாய்ப்பிறப்புத்தீர்வன். (உ0)

கடநீரின்மேகநீரிற் கண்டவானிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுங் கூடியொன்றுமெப்போதும்
இடமானபிரமஞ்சாட்சி யிரண்டுமெப்போதுமேகம்
திடமாகச்சுவானுபூதி சிவோகமென்றிருந்திடாயே. (அஉ)

தானுகும்பிரமரூபஞ் சற்குருநூலாற்றேன்றும். (அஅ)

அதுநீயாகும் நீயதுவாகுமென்னும் அர்த்தமு மகண்டமென்றே யசிபத ஐக்கியங்காட்டும். (அக)

### வேதாந்த சூடாமணி.

விடயமது சிவ சீவர் தமதேகத்துவமாம். (க)

நீகடவுள் சொருப நிசஞ் சச்சிதானந்த நித்தியம் பூரணமாக நீ நினைந்து கொள்ளே. (உக)

இகலில்லா அறிவு மாத்திரமாகிநின்ற இலக்கியமாம் பிரமகூடத்த வுயிர் கொள்ளிற், புகரிலா அது இதுவே இது அதுவே யென்னப் பொருந்து தாதான்மியம் வந்துறும். (௧௨௪)

என்று மெவ்விடத்தினுமோருடம்பு முருதொன்று யிருந்த சச்சிதானந்தசிவசொருபமாதல், நன்றிதரு விதேககைவல்லியமென்றிசைப்பர். (௧௮௨)

## மெய்ஞ்ஞான நிலையம்.

பூதபௌதிகமாய்ப் பொலிபேதமும்
ஏதமின்றி யிருஞ்சிவமாய் விடப்
போதமாம் அனுபூதியிற் கண்டவர்
ஆதியாம் அதிவன்னுச்சிரமரே.

## சமாதி.

ஆதலாலாகாயத்திற் கடாகாயம் வேறுணுப்போல்
பேதமிலான்மா சீவன்பரனெனப்பிராந்தியாலே
யோதிடாநின்றதன்றி யுணர்வுடைப்பேதமின்று
னீதியினிறைந்த சிவனிலையதிவ்வண்ண மென்றே.

## மெய்ம்மொழி.

தாக்கிலா ஞானயோகத் தன்மைதான் யாதோவென்னில்
சாக்கிரங்களுச் சுழுத்திதுரியந்தான் துரியாதீதம்
சாக்கிரமதனிற்கண்டு சதுர்த்தச கரணம் யாவும்
சாக்கிராதீதமாதல் தற்பரமாவதென்றான்.

## திருவம்மானை.

உண்டுதேக்கிட்டெங்குமொன்றுனேனம்மானை
உண்மைக்கோருத்தரந்தானில்லைகாணம்மானை.

சத்தியமானது சத்தேகாணம்மானை
தற்போதம் போனவிடந் தற்பரமாமம்மானை.

## சிவானந்தமாலை.

மித்தையுடற்கட்டறுத்து மெய்யருளாய் மெய்யொழிக்குந்
தத்துவமுங் கேவலமுஞ் சார்வகற்றிச்-சுத்தத்
தனியாகித்தானும்போய்த் தற்பரமாய்விட்டாற்
சனியானிது சத்தியம்.

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை அட்டகம்.

அறிவோடறிபவனரியவருபொருளடைய வொருபொருளாகியே. (௪)

## தத்துவராயர் மோகவதைப்பரணிசசிவன்னபோதம்.

ஊக்கியப்பரசீவர் தங்களுடம்பிரண்டிலக்கணு
வாக்கியப்படி நீக்கிஞலொருவத்துவே பரவத்துவே. (௭௧)

## ௸ ௸ துணைவாழ்த்து.

நாமொழிந்துசிவமாயிருந்தமை பாடீரோ. (௬)

## ௸ பாடுதுறை.

ஊனேமறிவதென் றாதடாகாளம்
உணர்வேபிரமமென் றாதடாகாளம்
நானேஅவனுமென் றாதடாகாளம்
நானுவதில்லையென் றாதடாகாளம்.

ஞானசதகம்.

இயம்புஞ் சாதிமூன்றுமிறந்துள பிரமந்தானாய்
முயன்றுணர்கின்றஞானங் கைவரில்முத்தியெய்தும்.

அனுபவதீபிகை.

மெய்ப்படுசிவத்தோடொன்றாகாவிடில் பவமேவுமன்றே.

தாயுமானவர்.

தன்னையறிந்தவர் தம்மைத்தானாகச்செய்தருளுஞ்சமத்தை.
அத்துவிதமான ஐக்கியஅனுபவமே.
தன்மயமாய்நின்றநிலை தானேதானாகிநின்றால்
நின்மயமாஎல்லாம் நிகழும் பராபரமே.
என்னைத்தானாக்கிக்கொண்ட சமர்த்தைப்பார்தோழி.
அதுவானாலதுவாவர் அதுவேசொல்லும்.
யானெனல்காணேன்பூரணநிறைவில் யாதினுமிருந்தபேரொளிநீ
தானெனநிற்குஞ்சமத்துறவென்னைத் தன்னவனாக்கவுந்தகுங்காண்.
எனதென்பதும்பொய்யானெனல் பொய்யெல்லாமிறந்தவிடங்காட்டும்
நினதென்பதும்பொய்நீயெனல் பொய்நிற்குநிலைக்கேநேசித்தேன்.
போதமென்பதேவிளக்கொவ்வும் அவித்தைபொய்யிருளாம்
தீதிலாவிளக்கெடுத் திருட்டேடவுஞ்சிக்கா
தாதலால்அறிவாய் நின்றவிடத்தறியாமை
யேதுமில்லையென்றெம்பிரான் சுருதியேயியம்பும்.

இவ்வளவு ஆபாசங்களைப் பேசிவிட்டு அதோடு நில்லாமல் "மாயாவாதிகள் கொள்கைகள் இங்ஙனம் வெறும் பொய்யா யொழிதலின், அவர் கொள்ளும் கேவலாத்துவிதம் நாஸ்திகவாதமாதலன்றி, அத்துவிதச் சொற்குரிய பொருளாகாதென்க" என்று கூறி, தாம் மாயாவாதியல்லரென்றும், தமது வாதம் உண்மையென்றும், தாம் ஆஸ்திகரென்றும், வேதாந்திகள் நாஸ்திகரென்றும் காட்டினார். சுமார் ஒருவருஷமாக இப்பத்திரிகையை வாசிப்போர்க்கெல்லாம் பரசமயகோளரியும் அவர் கொள்கையை மெய்யெனக்கொண்டவரும் மாயாவாதிகளென நன்றாயறிந்திருக்கின்றார்கள். இதுவரையில் செய்துவந்த வாதத்தால் கோளரியின் வாதம் துர்ப்பலவாதமென்றும் பொய்வாதமென்றும் அறிவார்கள். அன்றி 1892௵ ஜூலை௴ 23௳ பிரம்மவித்தியாவில் சுதேசியாலெழுதப்பட்ட * "ஆஸ்திக நாஸ்திக" மென்னும் விஷயத்தால் இவரது சித்தாந்தம் மூன்றிலொருபங்கு ஆஸ்திகமும் இரண்டு பங்கு நாஸ்திகமுமாமென்றும், அதுவும் வேதாந்திகளை நோக்க முற்றும் நாஸ்திகமாமென்றும் வெட்டவெளியாய் விட்டமையால் இனி இவரது ஆஸ்திகம் வீட்டினுள் பிரகாசிக்கும் ஆஸ்திகமாமேயன்றிப் பகிரங்கத்தில் அதிலும் ஆராய்ச்சியில் பிரகாசிக்க மாட்டாதென்பதையறியக்கடவர். இப்பிரமவித்தியா பத்திராதிபர் எழுதிய அத்துவித விசாரத்தால் இவர் அத்துவிதியாகாரென்பதும், வேதாந்திகளே அத்துவிதிகளாவாரென்பதும் நிலைப்பட்டு, இவரது போலி அத்துவிதவா

* ஆஸ்திகநாஸ்திக விஷயம் இதற்கடுத்த இடத்திற் காணலாம்.

தம் ஒய்ந்து தலைசாய்ந்து மாய்ந்தது. தடுக்கமுடியாத மாயாவாதியும் நாஸ்திகவாதியும் போலி அத்துவிதவாதியும் பொய்வாதியுமான இந்தக் கோளரி, அங்ஙனமில்லாதாரை அங்ஙனமாக எழுதுதற்குக் காரணம் பேராசையும் துரபிமானமுமேயாம்.

முடிவாக "இத்தன்மையுடையவாதிகள் தாம் அத்துவிதவாதிகளென்று எழுதல் சிறப்பன்று. சூனியவாதிகளென்றெழுதலே அவர்க்குச்சிறப்புடைத்தாமென்க" என்றார். இவர், உலகமெல்லாம் சிவதிருஷ்டியில் சூனியமென்றும், உயிர்கள் சிவதிருஷ்டியில் அசத்தென்றும் கூறும் மதஸ்தராயிருப்பதாலும், மாயை யிவ்வுலகுக்கு முதற்காரணமென்று சொல்லுகிறவராதலாலும் இவரையும் இவர் நண்பரையும் சூனியவாதிகளென்றும் மாயாவாதிகளென்றுங் கூற யாதுந் தடையில்லை. அவ்வாறு வேதாந்திகளைச் சொல்லப்படாது; சொல்லநியாயமுமில்லை. அவர்கள் உலகையும் ஜீவர்களையும்சூனியமென்றும் அசத்தென்றும் சொல்லுகிறதில்லை; அநிர்வசனமென்கிறார்கள். அன்றி உலகிற்கு மாயை முதற்காரணமென்று சொல்லாமல் சிவமேமுதற்காரணமென்று சொல்லுகிறார்கள். மேலும் ஜகஜீவர்களைச்சிவத்தினும் வேறல்ல வென்கிறபடியால் தோந்திகள் சிவாபேதவாதிகளான அத்துவிதிகளென்பது திண்ணம்; இவர் சிவத்துக்கு ஜகஜீவர்களைப் பேதங் கூறுகின்றமையால் சிவ ஜீவஜகபேதவாதியான துவிதவாதியென்பது திண்ணத்தினுந்திண்ணம்! இனி,இவர், தம்மதத்துக்குரியவாறு துவிதவாதியென்றும் பேதவாதியென்றும் சூனியவாதியென்றும் மாயாவாதியென்றும் நாஸ்திகவாதியென்றும் பொய்வாதியென்றும் பெயர்பெற்று வெளிப்படுவதே நியாயமும் அழகுமாம். அங்ஙனமின்றித் தமது பேரைப் பிறர்க்கீவதும் பிறர்பெயரைத் தாம் அநீதமாய் அபகரிப்பதும் நியாயமுமன்று; அழகுமன்றாம்.

இதுவரையில் எழுதிவந்த நியாயங்களால் கோளரி ஆக்ஷேபித்த ஆக்ஷேபங்களெல்லாம் சூரியன் முன் பனிபோலவும் இருள்போலவும் ஒழிந்தனவாம். இனியேதேனும் ஆக்ஷேபமுளதேல் தயைசெய்துவெளிப்படுத்தக்கோருகின்றோம்.

உலகத்தாருண்டென்பதில்லென்பான் வையத்து
அலகையா வைக்கப்படும்.—(குறள்)

பிரமகீதை ஐதரேயவுபநிடார்த்தத்தை யுரைக்கும் அத்தியாயம்.

தத்தமாலான பெத்தவாதியர் தாந்தங்களிற் றுங்கடர்க்கங்கள்
கத்திடாநிற்கும் பரிசெலாஞ் சுருதிமிருதிகள் கருதியதழிக்கும்
சுத்தமாவிருத்தமாகு மென்றேயென் றுணிவு தொல்பிறவியிற்சுழல்வார்
சித்தமானதுபோயிவற்றிலே காதல்செய்யுமுன்செய்ததீவினையால். (௬)

காதலாற்றத்தங்கடவுள ரருளாற் காலபாகத்தினாலறத்தாற்
போதராதலினால் வேதவாதத்தைப் பொருந்துவர் புகன்றவவ்வடைவே
வேதவாதத்தை மேவுநல்வினையினால் விருப்பினாலன்றிமேவினரும்
சாதலானதும் பிறத்தலுமில்லாத்தற்பதந்தன்னையே சார்வார். (௭)

வந்து விடுகின்றது. நீரும் சத்துப்பொருள், வாயுவும் சத்துப்பொருள்
ஆகலின் இரண்டு பொருள்களும் ஒன்றிருந்த இடத்திலொன்றிராமல்
விலகிப்போகின்றன. இதனால் இரண்டு சத்துப்பொருள்கள் ஒரு இட
த்திலிராவென்பது திண்ணமெனத் தெரிகிறது. இங்ஙனமே பரிபூர
ணமும் சத்துமான கடவுளினிடத்துப் பிறிதொரு சத்துப்பொருளிரு
த்தலமையாது. அமையாதாகவே ஷை வாதம் பொருத்தமில்லாவாத
மாய்ப் போமென்றறிக. ஷை இருபொருள்களுஞ் சத்தாகச் சொல்ல
வேண்டுமானால்சொல்லலாம். அவ்வாறு சொல்லுங்கால்கடவுளுக்குப்
பரிபூரணஞ் சொல்வதைத் தவிர்த்துக் கண்டப்பொருளாக்கிக் கட
வுளுமுலகுமிருக்கின்றனவாகச் சொல்லவேண்டும். அப்படிச் சொல்
லுவோமாயின் கடவுளும் உலகமும் கண்டப்பொருள்களென்று சொ
ல்லவந்து, கடவுள் ஒரு இடத்தும் உலகு ஒரு இடத்தும் இருப்பன
வாகி, கடவுளிருக்குமிடத்து உலகமில்லையென்றும், உலகம் இருக்கு
மிடத்துக் கடவுளில்லையென்றும் கூறுதற்கிடனாகும். இவரே மற்றொ
ரு சார்பாகச் சேதனாசேதன வுலகை யிரண்டாக்கி உயிரொன்றும் பஞ்
சபூத வுலகென்று மொப்பி, கடவுள் ஒருபொருளும், உயிர் ஒரு பொ
ருளும், உலகு ஒரு பொருளுமாக முப்பொருள்கூறி, ஷை முப்பொரு
ளுஞ் சத்தென்கின்றனர். அவ்வாறு பகருமிடத்து மூன்றிலொருபாக
த்தில்கடவுளும், மூன்றிலொருபாகத்தில் உயிர்த்தொகுதியும், மூன்றி
லொருபாகத்தில் உலகு மிருப்பனவாய் ஒத்துக்கொள்ளத்தக்கவராகி
ன்றனர். இவ்வாறுரைப்பது மிக எளிதாயினும் கடவுளுக்குப் பரிபூர
ணத்துவஞ் சொல்பவர் இதையொருபோது மொப்பமாட்டார். ஒப்பு
தலுஞ் செய்யாது மூன்று பொருளுக்குச்சத்துங் கூறவேண்டுமானால்
யுக்தி அநுபவங்கட்கு விரோதமாகும்.

முதலாவது கொள்கையின்படி பார்க்கின் இந்த ஆக்ஷேபங்களெ
ல்லா முண்டாதலில்லை. இந்தக்கொள்கைப்படி கடவுளுக்குப் பரிபூர
ணமுஞ்சித்திக்கின்றது; உயிரும் பஞ்சபூத உலகமுமிருத்தற்கிடனுமா
கின்றது. ஒரு பொருளினிடத்து மற்றொரு பொருளிருத்த லெங்ஙன
மமையுமெனின் ஒரு சத்துப்பொருளில் மற்றொரு சத்துப் பொருளி
ருத்தலமையாதேயன்றி யொரு சத்துப்பொருளில் மற்றொரு அசத்து
அல்லதுசத்துப்போலிப் பொருளிருத்தற்கு விரோதம் ஏதுமில்லையே.
அவ்வாறிருக்கு மென்பதற்கு அநேக திருட்டாந்தங்களிருக்கின்றன.
அவைகளான: கயிற்றின்கண் அரவு, இப்பியில் வெள்ளி, கானலின்
கண் நீர், இந்திரசாலத்தில் பொருள், மனத்தினிடத்துச் சொப்பன
வுலகு முதலியனபோலாம். உலகத்துக்கு மலடி மைந்தன் முதலிய
திருட்டாந்தமும் கூறப்படுகின்றது. இவைகளெல்லாம் ஒவ்வொரு
அவசரத்துக்கு ஒவ்வொரு திருட்டாந்தமாம். உலகம் பொய் யென்
பது வளையில் மலடி மைந்தன் முதலிய திருட்டாந்தமாம்; அதிஷ்
டானத்தைத்தவிர ஆரோபமில்லை யென்பது வளையில் கயிற்றின்கண்